ओं



# ஈசாவாஸ்யோபநிஷத் டீகா

என்னும்

## தமிழுரை.



இஃது

மதுரை என வழங்கும் ஹாலாஸ்ய க்ஷேத்திரம்

ஸ்ரீமத் பரமஹம்ஸ

**ஸ்ரீ பாலசுப்ரமணிய பிரம்மசுவாமிகளால்**

முமுக்ஷுஜநோபகாரமாய்

இயற்றப்பட்டு,



---



சென்னை:
ஊ - புஷ்பரதசெட்டி அண்டு கம்பெனியாரது
கலாரத்நாகரஅச்சுக்கூடத்திற்

# அட்டவணை.

# ओं

శ్రీ గు రు భ్యో న మః.

# ஈசாவாஸ்யோபநிஷத் டீகா.

## வி ஷயஸூசிகை.

శ్లో॥ ఓమహంసచ్చిదానన్దం ద్వైతాభావోపలక్షితమ్।
శివంప్రశాన్తమమృతం శుద్ధబ్రహ్మైవ కేవలమ్॥ ౧॥

శ్లో॥ మీనాక్షీనగరీవాసి పరమహంసద్విజోత్తమాన్।
స్వానుభూతినిరత శ్రీపిచ్చుకప్పావధూయోగాయతిః॥ ౨॥

శ్లో॥ మమగురూన్సదాశివ పరబ్రహ్మశ్రమీవరాన్।
ప్రణమామిముహుర్భక్త్యా భాష్యపాఠాదికర్మసు॥ 3॥

శ్లో॥ తత్ప్రసాదబలేనైవ విజ్ఞాతంయచ్చకించన।
సటీకాఈశావాస్య తాత్పర్యంభాష్యసమ్మతమ్॥ ౪॥

శ్లో॥ శ్రుతివాక్యైస్తథాచార్య వాక్యైరేవవిశేషతః।
జిజ్ఞాసుజనతోషాయ సఙ్క్షేపేణబ్రవీమ్యహమ్॥ ౫॥

శ్లో॥ శ్రీమత్పరమహంసబాల సుబ్రహ్మణ్యేతిస్వామినా।
ఈశావాస్యోపనిష త్తాత్పర్యమిహకథ్యతే॥ ౬॥

என்றால், இந்த ஈசாவாஸ்யோபநிஷத்தின் தாத்பரியத்தை எழுதத் தொடங்குங்கால் விக்கிநமில்லாமல் ஸமாப்தியை யடைவதற்காக தெய்வத்தையும் குருவையும் பிரார்த்தனை செய்யும் விதத்தைத் தெரிவிக்குஞ் ச்லோகங்களாம்.

ஜநநமரணப் பிரவாகத்திற் சுழன்றுழலும் பிராணி களை இரக்ஷிக்கும் பொருட்டு வேதம் இரண்டுமார்க் கங்களைத்தெரிவிக்கின்றது. அவைகளுள் ஒன்று கர்ம்ம மார்க்கம் மற்றொன்று ஞாநமார்க்கம். இதில் கர்ம்ம மார்க்கம் இரண்டுவகுப்புள்ளது. அதாவது, காம்ய கர்ம்மம், நிஷ்காமகர்ம்மம்; பேதபுத்தியையும், அகங் கார மமகார ஸ்வரூபங்களாயுள்ள கர்த்திருத்வ போக் த்திருத் வாதிகளையும், காமக்குரோ தாதிகளென்கிற அசுத்தத்வத்தையு முடையவர்களா லநுஷ்டிக்கப்ப டும் மார்க்கமே காம்ய கர்மமெனப்படும். தாஞ்செ ய்யும் எல்லாச் சத்கர்மங்களும் பகவதர்ப்பணமே என்கிற புத்தியையுடையோர்களா லநுஷ்டிக்கப்படு வதே நிஷ்காம்ய கர்ம்மமெனப்படும். இவ்வித நிஷ் காம்ய கர்ம்மங்களைச்செய்து சித்தசுத்தியை யடைந்து அபேத புத்தியையும், கர்த்திருத்வ போக்த்திருத்வ அகங்கார மமகாரங்களற்ற நிலைமையையும் காமக் குரோதாதிகளால் விடுபட்ட சுத்தத்வத்தையும் பாப ரகிதத்வத்தையு முடையவர்களா லநுஷ்டிக்கப்படுவ தே ஞாநமார்க்க மெனப்படும்.

இவ்விரண்டு மார்க்கங்களையுங் குறித்து பதினெட்டு மந்திரங்களால் சவிஸ்தாரமாகச் சொல்லப்படுவதே (சுக்ல எஜுர்வேத வாஜஸநேய ஸம்ஹிதாந்தத்தில் சொல்லப்படும்) இந்த ஈசாவாஸ்யோபநிஷத்தென்று தெரிந்து கொள்ளவும். இதில் முதல்மந்திரம் ஞான மார்க்கத்தைத் தெரிவிக்கிறது:—அதாவது.

1 - வது மந்திரம், சுவாநுபவமாகிய நிஷ்டையை யடைய அபேக்ஷிக்கிற முமுக்ஷு, தாரேஷண

ரேஷண வித்தேஷணங்களாகிய ஈஷணத்திரயங்களை யும் விட்டு ஆத்மநிஷ்டை யுடையவனாகி ஆத்மாவை (தன்னை) இரக்ஷித்துக் கொள்ளவேண்டு மென்பதைச் சொல்லுகிறது.

2 - வது மந்திரம், அப்படி நிஷ்டையை யடைவ தற்குச் சாமர்த்திய மற்றவனும் கர்மேந்திரிய ஞானேந் திரிய மனோநிக்கிரகமற்றவனுமான ஒருவன் மோக்ஷா பேக்ஷ யடைவனாயின் அவனும் இரக்ஷிக்கப்படும் மார்க்கத்தைச் சொல்லுகிறது.

3 - வது மந்திரம், மேற்சொன்ன இரண்டு மார்க் கங்களையும் விட்டு இந்தப் பிரபஞ்சத்தினுடையவும் சுவர்க்காதிகளி னுடையவும் சுகமே சுகமென்று அவி வேகத்தா லெண்ணி பலாபேக்ஷ யுடையவர்களாகி கர்மங்களை யநுஷ்டித்து விஷயாசக்தர்களா யிருக் கும் காம்ய கர்ம்மாநுஷ்டானர்களாகிய கற்றறிமோ ழைகளைக்குறித்தும் அவர்களுடைய கதியைக்குறித் தும் அவர்களும் நன்மையடையும் மார்க்கத்தைக் குறித்துஞ் சொல்லுகிறது.

4 - வது மந்திரம், எந்த பகவத்ஸ்வரூபத்தை சுவாநு பவத்தால் தெரிந்துகொள்ளாமையால் ஆத்மஹந்தாள் (தற்கொலைசெய்யும் அக்ஞானிகள்) ஜனனமரண ஸ்வ ரூபமான இந்தசம்சாரத்திற் பிறந்திறந் துழன்றுண் டு கொண்டிருப்பார்களோ, பரம புருஷார்த்தத்திற் கிது விரோதமானதென்றெண்ணி எந்த ஆத்ம ஞானி கள் இந்த ஜனனமரண ரூபமாயுள்ள சம்சாரத்தினின் றும் விடுபட்டுமுத்தர்களாகி மோக்ஷத்தை யடை வார்களோ அப்பேர்ப்பட்ட ஆத்மஸ்வ ரூபத்தைத் தெரியப்படுத்துகிறது.

5 - வது மந்திரம், ஆத்மஸ்வரூபத்தை மேற்சொன்ன மந்திரத்தில் காரணஸ்வரூபமாய் மாத்திரஞ்சொல்லப்பட்டது. அப்பேர்க்கொத்த ஆத்மா எப்படிப்பட்டதோ தூரத்திலிருக்கிறதோ அல்லது சமீபத்திலிருக்கிறதோ, தூரமென்றால் எவ்வளவு தூரமோ, சமீபமென்றால் எவ்வளவு சமீபமோ என்கிற இப்பேர்க்கொத்த சந்தேகங்கள் நிவர்த்திக்கும் மார்க்கத்தையும், அவ்வநுஷ்டானத்தால் ஆத்மஸ்வரூபாவாப்தியை யடையும்பொருட்டு ஆத்மாவினுடைய காரணகாரியசொரூபங்களைத் தெரிவிக்கிறது.

6-7 - வது மந்திரங்கள், மேற்சொன்ன மந்திரத்திற் சொல்லப்பட்ட ஆத்மஸ்வரூப ஞானானுபவபலமாகிற ஜீவன் முக்திலட்சண விவரங்களைக்குறித்துச் சொல்லுகிறவைகள்.

8-வது மந்திரம், முன்சொன்ன மந்திரங்களில் சொல்லப்பட்ட ஆத்மஸ்வரூபத்தைத் தெரிந்துகொள்ளாமையே ஜீவத்வமென்றும், நிஷ்டையாலுண்டாகும் ஸ்வானுபவமே ஆத்மத்வமென்றும் அப்படிப்பட்ட ஸ்வஸ்வரூபமாயுள்ள ஆத்மஸ்வரூபவிவரத்தை அறிவிக்கிறது.

9 - வது மந்திரம், இந்த ஈசாவாஸ்யோபநிஷத்தின் முதல் மந்திரத்தில் ஈஷணத்திரயங்களையும் பரித்தியாகம்பண்ணி சத்குருவையடைந்து ஞானநிஷ்டாப்பியாச ஸ்திதியையடையுஞ் சாதனங்களைக் குறித்துச் சொல்லப்பட்டது. அப்படிப்பட்ட ஞானநிஷ்டையடைவதற்கு அசமர்த்தனாயிருப்பவன் சாஸ்திரவிஹித கர்மங்களின் பலனை யபேக்ஷியாமல் பகவதர்ப்பணமாகச் செய்யவேண்டுமென்று இரண்டாவதுமந்திர

உபதேசித்து, இவ்விரண்டு மந்திரங்களைப்பற்றின சாதகபாதகங்களையும், தத்பலங்களையும்பற்றி இதுவரைக்குஞ் சொல்லப்பட்டது. இவ் வுபதேசங்களினுல் மனது ருசிக்காமல் வேதசாத்திரங்களி லங்கங்கே வேறுவேருய்ச் சொல்லப்பட்டிருக்கும் அல்ப பலங்களி லாசக்தியுடையவர்களாகி அவைகளை யநுஷ்டித்து தத்பலன்களையடையக் கோருபவர்க்குண்டாகும் பலாபலவிஷயத்தைக்குறித்துச் சொல்லுகிறது.

10 - வது மந்திரம், எத்தனை விதங்களால் சொல்லினும் கிரகிக்கச் சாமர்த்தியமற்ற காம்யகர்மத்திலேயே ஆசக்தியை யுடையவர்கள்கூட நன்மையையடைய வேண்டி பெரியோர்களா லநுக்கிரகிக்கப்பட்ட மார்க்கத்தைச் சொல்லுகிறது.

11 - வது மந்திரம், அநாதியாயுள்ள சுத்தப் பிர்ம்மமானது தன்னிலீனமாயிருக்கும் அவ்யாகிருதம், மஹதகங்காரம், மூலப்பிரகிருதி, மாயை என்கிற பேர்களால் விவகரிக்கப்படும் ஸ்வசக்திவ்யாபகத்தால் தன்னுடைய (சுத்தப்பிரம்மத்தினுடைய) ஸ்வரூபம் ஆவிரிக்கப்பட்டது. இப்படிப் பரவ்யாபகத்திற் காஸ்பதமானபடியால் பரப்ரம்மமென்று சொல்லப்படுகிறது. அப்பேர்க்கொத்த மாயையிலிருந்து பிர்ம்ம விஷ்ணு உருத்திரர்களும், அவித்யாஸ்வரூபமான ஆவரண விக்ஷேபசக்திகளு முண்டாயினர்கள். அந்த அவித்தையால் ஜீவத்வமுண்டாயிற்று. இப்படி சுத்த பிர்ம்ம ஸ்திதியிலிருந்து ஜீவஸ்திதியை யடைவதற்கு மாயை அவித்யை என்கிற இரண்டுபடிகள் (ஸ்திதிகள்) இருக்கின்றன. அப்படியே ஜீவஸ்திதியிலிருந்து சுத்த பிர்ம்மஸ்திதியையடைவதற்கு அவித்தை, மாயைஎன்கிற

படிகளை (ஸ்திதிகளைக்) கடக்கவேண்டும். ஆகையால் அவித்தை என்கிறபடியைக் கடந்து மாயையென்கிற படியையேறுகிறதற்குச் சாதனமான (மாயோபாதிகர்களான பிர்ம்மவிஷ்ணு உருத்திரர்களைக் காட்டிலும்) இதர தேவதாராதனை அல்லது உபாசனைக் கிரமங்களான அதமசகுணோபாஸனமார்க்கத்தைக் குறித்துச் சொல்லுகிறது.

12-வது மந்திரம், மேற்சொன்ன மந்திரத்தில் அவித்தையையும் அவித்யா காரியங்களையும் உபாசனை செய்பவர்களாகிய அதம சகுணோ பாசகர்களை நிந்தித்து அவர்களுங்கூட தங்களுபாஸனையை பகவதர்ப்பணமா யநுஷ்டித்தால் பரம்பராக் கிரமமாய் மோக்ஷத்தையே யடைவார்களென்று சவிஸ்தாரமாய்ச் சொல்லப்பட்டது. அப்படியே மாயையும் மாயா காரியங்களையும் உபாஸனை செய்பவர்களான மத்திம சகுணோ பாசகர்களை நிந்தித்து அவர்களுங்கூட அவ்வுபாஸனையை பகவதர்ப்பணமாகச் செய்வார்களானால் பரம்பராக்கிரமமாய் மோக்ஷத்தையே யடைவார்களென்று சொல்லுகிறது.

13-வது மந்திரம், அணிமாதிஸித்திகளிலும், கர்ம்மத்தையே ஆசரிக்காமலிருக்கிற விஷயத்திலும் ஆசக்தியுடையவர்கள்கூட நன்மையை யடையும்பொருட்டு பெரியோர்களா லநுக்கிரகிக்கப்பட்ட மார்க்கத்தைக் குறித்துச் சொல்லுகிறது.

14-வது மந்திரம், முன்னே இரண்டு மந்திரங்களால் சொல்லப்பட்ட மத்திம சகுணோபாஸனையை பலத்தையபேக்ஷிக்காமல் பகவத்பிரீதியா யநுஷ்டிக்

கும் விஷயத்தில் மாயை என்கிறபடியையுங்கடந்து கிரமமாய் மோக்ஷத்தை யடையலாமென்று சொல்லுகிறது.

15 - வது மந்திரம், கர்ம்மபலத்தி லாசக்தியுடையவன் காம்ய கர்ம்மாநுஷ்டானத்தினுல் தேவதைகளையாராதிக்கிறபடியால் இகலோகசுகம் முதற்கொண்டு பிரகிருதி லயம்வரைக்குமுள்ள ஸ்திதியையுடைய பிரவிர்த்தி மார்க்கத்தைக்குறித்தும், இதி லேழாவது மந்திரத்திற் சொன்னபடி ஆத்மைவாபூத்விஜாநத: சகலமும் பகவத் ஸ்வரூபமேயென்று தெரிந்து கொண்டவனுடையும் நிவர்த்தி மார்க்கத்தைக் குறித்தும் அங்கங்கே இதுவரைக்குஞ் சொல்லப்பட்டது, என்ருல் பிரபஞ்சத்தி லிருக்கிற சிஷ்யரூபங்களான சகலத்தையும் ரக்ஷிக்கும்படியாக அவரவர்களுக்குத்தக்க மார்க்கத்தை ஏற்படுத்திக்கொண்டு அநுஷ்டாநம்பண்ணி எவ்விதமாகவாவது ராகத்வேஷ காமக் குரோத லோப மோக மத மாத்சரிய ஈரிஷ டம்ப அசூய அஹங்கார மமகாரங்கள் முதலாகிய துர்க்குணங்களைப் போக்கடித்துக்கொண்டு நன்மை யடையவேண்டிப் பிரவிர்த்தி நிவிர்த்தி மார்க்கங்க ளிதுவரைக்குமே சொல்லப்பட் டிருக்கிறதல்லவா? அப்படியே ஸ்வஸ்வரூபாநுபவமான ஆத்மாநுபவ விவரமு மிதுவரைக்கே சொல்லப்பட்டிருக்கிறதல்லவா? அந்த ஆத்[மா]நுபவமானது அதம மத்திம சகுணோபாஸனையினு[ல]டைய முடியாததென்று சுருதிகள் கோஷிக்கிறபடி[யி]ல் அப்படிப்பட்ட சாக்ஷாத்காரத்திற்கு வேண்டிய [சா]தனங்களை இந்த மந்திரஞ் சொல்லுகிறது.

16-வது மந்திரம், மேற்சொன்ன மந்திரத்தில் சொன்னபிரகாரம் மனது ஏகாக்கிரஸ்திதியை அடைய பகவானை (ஆத்மாவை) பிரார்த்தனைசெய்யும் உத்தமசகுணோபாஸனா விதத்தைக் குறித்துச் சொல்லுகிறது.

17 - வது மந்திரம், மேற்சொன்ன மந்திரத்திலுள்ள உத்தம சகுணோபாஸனையென்கிற காமக்குரோதாதி நிவர்த்தகங்களான சித்தசுத்தியையடைந்து நிர்க்குணஸ்திதியான தியானம் நிஷ்டை ஸமாதி ஸாக்ஷாத்காரம் ஸ்வாநுபவம் முதலாயுள்ள இப்பெயர்களால் வ்யவகரிக்கப்படுகிற ஸ்திதியை யடைந்தவனுடைய மரணத்திற்குப் பிறகு அச்சரீரம் என்னவாகி விடுமோ அந்தவிவரத்தைக்குறித்துச் சொல்லுகிறது.

18 - வது மந்திரம், அநேக சாதனங்க ளிதுவனாக்குஞ் சொல்லப்படினும் மனதை ஞானமார்க்கத்தில் பிரவேசிக்க இடங்கொடாமல் காம்ய கர்ம்மங்களையாசக்தியுடன்செய்து சுவர்க்காதி லோகங்களை யடைந்து மறுபடியும் பிறந்து காம்யகர்ம்மங்களை அநுஷ்டிக்கிறவர்கள் மரணகாலத்திற்கூட தாமிதுவனாயி லாராதனை செய்துவந்த அக்கினியைப் பிரார்த்திக்கிற விதத்தைக்குறித்துச் சொல்லுகிறது.

மேற்சொன்ன பதினெட்டு மந்திரங்களால் கர்ம்மஞானமார்க்கங்களையும், உத்தம மத்திம அதம சகுணோபாஸனைகளையுஞ் சொல்லி, அதம மத்திம சகுணோபாஸனைகளையும் காம்ய கர்ம்மோ பாஸனைகளையும் நிஷேதித்து துர்க்குணங்களைத் தன்னிடத்தினின்றும் விலக்கி மனதினுடைய ஏகா கிரத்திற்குச் சாதனமானதாயுள்ள உத்தம சகுணோ பாஸனையையே

அநுஷ்டிக்க வேண்டுமென்று நிர்ணயிக்கிற இந்த ஈசா வாஸ்யோப நிஷத்துக்கு மும் மதஸ்தர்களும் பாஷ் யஞ்செய்திருக்கிறார்கள்.

ஜநந மரண ரகிதமான மோக்ஷத்தை யடைவதற்கு சங்கல்பங்களினுடைய நாசமும், வாஸனைகளினுடை ய நாசனமே முக்கியமென்று சுருதிகள் கோஷிக்கிற படியால், அப்படிப்பட்ட சங்கல்ப வாஸநாநாசமான து ஐக்கியத்தினு லல்லது வேறெந்தவழியாலும் அடை யமுடியாது. அந்தஸ்திதி வருமேயானுல் அதுதான் அத்துவைதம். அப்படியானுல் பெரியோர்களால் இய ற்றப்பட் டிருக்கிற விசிஷ்டாத்வைத பாஷ்யத்திற் கும், துவைதபாஷ்யத்திற்கும் பிரயோஜன மென்ன வெனில்:—சாதனமின்றி யொருகாரியத்தைச் சாதிப் பா ரொருவருமில்லை யாகையால், முதலில் துவைதா நுஷ்டானத்தையும் அந்தத் துவைதாநுஷ்டானத்தில் மனது நன்றாய் நிலைத்தபிறகு விசிஷ்டாத்வைதாநுஷ் டானத்தையும் பிற்பாடு வேதாந்தமென்று சொல்லப் படும் அத்துவைதாநுஷ்டானத்தையும் அப்பியசிக்க லாமாகையால், விசிஷ்டாத்வைத துவைத பாஷ்யங் கள் அப்பிரயோஜன மென்று சொல்லக்கூடாது. அவைகளும் அத்துவைதத்தைப்போல் சாதனங்களெ ன்றே கிரகித்துக் குரோதம் வைஷம்யம் முதலான துவேஷங்களினின்றும் நிவர்த்தியாகி, இம்மூன்று பா ஷியங்களும் பரமசுகமான மோக்ஷ சாதனங்களே என்று சமபுத்தியாய் கிரகிக்கிறதே சிரேஷ்டமென்று தெரிந்துகொள்ளவும்.

இவ்வீசாவாஸ்யோபநிஷத்திற் கிதுவரையி லநேக பாஷ்யங்க ளிருந்தபோதிலும், அவைக ளெல்லாம்

# ஈசாவாஸ்யோபநிஷத் டீகா.

శ్లో॥ యేనాత్మనాపరేణేశా వ్యాప్తంవిశ్వమశేషతః।
సో౽హం దేహత్రయీసాక్షీ వర్జితోదేహతద్గుణైః॥

சுலோ ‖ ஏநாத்மநாபரேணேசா வ்யாப்தம்விசுவமசேஷதஃ।
ஸோஹம்தேஹத்ரயீசாக்ஷீவர்ஜிதோதேஹதத்குணைஃ‖

எனின், எந்த பகவத் ஸ்வரூபத்தால் (ஆத்மவஸ்துவால்) பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், மஹர்லோகம், ஜநோலோகம், தபோலோகம், ஸத்தியலோகம் முதலிய சப்தலோகங்களும் மற்றுமுள்ள சகலமும் வியாபிக்கப்பட்டிருக்கின்றனவோ, அப்படிப்பட்ட தத்பதவஸ்து அஹம் (நான்) என்கிற சப்தத்தால் விளங்குகிறது. அந்த அஹம் சப்தலக்ஷியார்த்தமாகிய பகவத்ஸ்வரூபம் ஸ்தூல சூக்ஷ்ம காரண சரீரங்களாகிய சரீர மூன்றுக்கும் சாக்ஷியாகையால் இச்சரீரங்களுடைய ஸ்வபாவகுணங்களாகிய ராகம் துவேஷம் காமம் குரோதம் லோபம் மோகம் மதம் மாச்சர்யம் ஈரிஷை அசூயை டம்பம் அஹங்காரம் மமகாரமாகிய துர்க்குணங்களை நிவர்த்திக்க வேண்டிய தவசியம். என்றால், எந்த துர்க்குணங்களால் இம்மூவகைச்சரீரங்களு முண்டாயினவோ அத்துர்க்குணங்களை நிவர்த்திக்காவிட்டால் பகவத் ஸ்வரூபாநுபவம் (ஆத்மாநுபவம்) உண்டாகவே மாட்டாதென்பது கருத்து.

அப்படிப்பட்ட பகவத்ஸ்வரூபாநுபவம் (ஆத்மாநுபவம்) எப்படி யுண்டாகுமெனில்:—

ఓమ్ ॥ పూర్ణమదః పూర్ణమిదం పూర్ణాత్పూర్ణముదచ్యతే ।
పూర్ణస్య పూర్ణమాదాయ పూర్ణమేవావశిష్యతే ॥
ఓమ్. శాన్తిః. శాన్తిః. శాన్తిః ॥

ஓம்॥ பூர்ணமதஃப்பூர்ணமிதம் பூர்ணாத்பூர்ணமுதச்யதே।
பூர்ணஸ்யபூர்ணமாதாய பூர்ணமேவாவசிஷ்யதே॥

ஓம், சாந்திஹி, சாந்திஹி, சாந்திஹி ॥

இடமும் வலமும், முன்னும் பின்னும், மேலும் கீழும் எத்திக்கிலும் பகவத்ஸ்வரூபம் நிறைந்திருக்கிறதென்று சுருதி கோஷிக்கிறபடியால் பகவான் (ஆத்மா) சர்வபரிபூர்ணன். சிரத்தாபக்தியுடன் கேட்கும் சர்வ பரிபூர்ணத்தின் அம்சமான சிஷ்யகோடிகளால், சர்வ பரிபூர்ணத்தி னம்சமான குருவாக்கியங்களைக் கிரகித்தால் மிகுந்ததும் சர்வ பரிபூர்ணமேயாம்:— என்றால், சொல்வோருங் கேட்போரும் எல்லோரும் சர்வபரிபூர்ணத்தினம்சமே என்ற அபேதஸ்திதியை யநுஷ்டிக்குங்கால் தத்பலனும் சர்வ பரிபூர்ணமாகவே முடியுமாகையால், சர்வபரிபூர்ணமாகிய சாந்தியே சொல்வோருக்குங் கேட்போருக்கு முண்டாகட்டும். சாந்தி, சாந்தி, சாந்தி என்று ஆரம்பிக்கப்படுகிறது.

---

## முதல் மந்திரம்.

### அவதாரிகை.

எவனெவன் எந்தெந்தக் கர்மங்களைச் செய்யவேண்டுமென்று வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறதோ, அந்தந்தப்பிரகாரம் பலன்களை இச்சியாமல் ஆசரித்து,

ஞானத்தையடைவதெப்படி? பகவானில் (ஆத்மாவில்) ஐக்கியத்தையடைந்து இந்த ஜநந மரணத்தினின்றும் விடுபடுவதெப்படி? என்ற, (சரீரத்தில் நெருப்புப்பிடித் தெரிகிறவன் தண்ணீர்த்துறைக்கு ஆவலா யோடுவான்போல) ஆவேதனமுடையவனும்:—

శ్రుతి॥ క్రియావన్తశ్శ్రోత్రియా బ్రహ్మనిష్ఠాః
స్వయంజుహ్వత ఏకర్షిం శ్రద్ధయన్తః।
తేషామేవైతాం బ్రహ్మవిద్యాం వదేత్ ॥

ముణ్డక. III. 2 - 10.

(இ-ள்.) அதிகப் பிரயாசத்துடன் தத்துவங்களை உபந்நியாசஞ் செய்பவர்களின் வாக்கியங்களைக்கேட்டு, அதில் சொற்ப பாகத்தையாவது அநுஷ்டிக்க எத்தனிக்காதவர்களுக்கும், வேதவாக்கியங்களில் நம்பிக்கை யில்லாதவர்களுக்கும், தியானம், நிஷ்டை, ஸமாதி முதலிய தேவதாராதனையில் மனதில்லாதவர்களுக்கும், ஒருவனுடைய தூண்டுதலில்லாமல் தனக்குத்தானே ஆத்மவித்தையில் அபிலாஷை யில்லாதவனுக்கும், சங்கல்பக்ஷய மநோநாசங்களை யடையவேண்டுமென்பதில் கொஞ்சமாகிலும் பிரயத்தன மில்லாதவனுக்கும் இந்த ஆத்ம (பிர்ம்ம) வித்தையைச் சொல்லக்கூடாது. என்றால், சத்குணங்களையுடையோருக்கே சொல்லவேண்டுமென்பதாம். முண்ட. III. 2 - 10.

శ్లో॥ ప్రశాన్తచిత్తాయ జితేన్ద్రియాయ
ప్రహీనదోషాయ యథోక్తకారిణే।
గుణాన్వితాయాఽనుగతాయ నిత్యం
ప్రదేయమేతత్సతతం ముముక్షవే॥

(......) ...ராகத் துவேஷ காமக் குரோத முதலிய துர்க்... ...டந்து சாந்தமான சித்தத்தை அடைந்தவனுக்... ...நிக்கிரக முடையவனுக்கும், சத் கர்மங்களைச்... ...நிவர்த்தி பெற்றவனுக்கும், சாஸ்திரத்திற்

சொல்லியபடி நம்பி யநுஷ்டிக்கிறவனுக்கும், எப்போதும் ரஜோகுண தமோகுண பூயிஷ்டனுகாமல் சாத்வீககுண பூயிஷ்டனுகி யிருக்கிறவனுக்குமாத்திரம், இந்தப் பிர்ம்ம (ஆத்ம) வித்தையைச் சொல்லவேண்டும். என்றுல், இதற்கு நேர்விரோதமாயிருக்கிற துர்க்குணங்களை யுடையோருக்குச் சொல்லக் கூடாது.

என்று சுருதி ஸ்மிருதிகள் கோஷிக்கின்றன. ஆகையால் சாதனசதுஷ்டய முடையோர்களுக்கேயல்லாது மற்றவர்களுக்குக் கூடாதென்பதாயிற்று.

சாதனசதுஷ்டய மாவதேதெனில்:—

நித்தியாநித்திய வஸ்துவிவேகம்,
இகாமுத்திரார்த்த பலபோகவிராகம்,
சமாதி ஷட்க சம்பத்தி,
முமுக்ஷுத்வம்,

என நான்குவிதங்களாம். அவற்றுள், முதன்மையான

நித்தியாநித்தியவஸ்து விவேகமாவது :—

శ్లో॥ నిత్యమాత్మస్వరూపంహి దృశ్యంతద్విపరీతకమ్।
ఏవంయోనిశ్చయస్సమ్య గ్వివేకోవస్తునస్సవై॥

(இ-ள்.) நாம் பார்க்கிறவும் கேட்கிறவுமான எல்லாவற்றையும் சாஸ்திரோக்தமாய் விசாரணைசெய்து அவற்றில் நித்தியமானவஸ்து எதுவென்று தெரிந்துகொண்டு நித்தியமில்லாத வஸ்துவில் உண்டாகுஞ் சத்திய (நிஜ) புத்தியைத் திருப்பிச் சத்தியமாயுள்ள நித்தியவஸ்துவிலேயே மனதை நிறுத்தலேயாம்.

அஃதெப்படி எனில் :—கானல் நீரை ஜலமென்று நம்பி ஸ்நாந பானுதி கிரியைகளை முடி... பவன், அதைக் கானல் நீரென்று தெ... ஜலமென்றெண்ணி கிரியைக்குப் பிர...

டானே, அவன் அதை யசத்தென்று தெறிந்துகொண்டபோதிலும் தோற்றம் மாத்திரம் போகாதோ, தோன்றினபோதிலும் அதனிடத்தில் சத்தியபுத்தியை வைக்கமாட்டானே, அப்படிப்போல தான் பார்க்கிறவும் கேட்கிறவுமான இப்பிரபஞ்ச வஸ்துக்களின் நிஜஸ்திதியை சாஸ்திரோக்தமாய் விசாரணைசெய்யுங்கால் நாமரூப விகாரங்களே என்றும், அநித்தியங்களென்றும் முடியும். அப்படிச் சித்தாந்தம் முடிந்தபோதிலும் தோற்றம்மாத்திரம் போகாது. தோற்றினபோதிலும் ஒருதடவை அநித்தியமென்று சாஸ்திரோக்தமாய் நிர்ணயஞ் செய்துகொண்டபிறகு, அதின் மேலுண்டாகும் நித்தியபுத்தியை விலக்கவேண்டியதவசியம். எப்படி ஜலத்தின்விஷயத்தில் சத்தியநித்திய புத்தியையுடைத்தாகி, கானல்நீரில்அநித்திய அசத்தியபுத்தி யுடைத்தாயிருக்கவேண்டுமோ, அவ்விதமாகவே பார்க்கிறவும் கேட்கிறவுமாயுள்ள பிரபஞ்சங்களினிடத்தில் அசத்திய அநித்திய புத்தியையும், பகவானிடத்தில் (ஆத்மாவினிடத்தில்) சத்திய நித்திய புத்தியையும், திருடமாகவுடைத்தாயிருப்பதே நித்தியாநித்தியவஸ்து விவேகமாம்.

இகாமுத்திரார்த்த பலபோகவிராகமாவது:—

శ్లో॥ బ్రహ్మాదిస్థావరాన్తేషు వైరాగ్యం విషయేష్వను।
యథైవ కాకవిష్ఠాయాం వైరాగ్యం తద్ధినిర్మలమ్॥

(இ-ள்.) மேற்சொன்னபடி நன்றான தைரியநிர்ணயமுடையோன் பார்க்கிற இகலோகத்தினுடையவும் கேட்கிற சுவர்க்காதிகளினுடையவுமான போகங்கள் அநித்தியம் அசத்தியமென்றறிந்து அதில் மலமூத்திராதிகளைப்போலவும் வமநஅசனத்தைப்போலவும் நிந்திக்கத்தக்கவைகளென்ற வைராக்கியத்தை யடைவதேயாம்.

சமாதிஷட்கசம்பத்தி யாவது:—

| | |
|---|---|
| தமம், | திதிக்ஷை, |
| சமம், | சிரத்தை, |
| உபரதி, | சமாதானம் |

என ஆறுவித சோபானங்களாம்; அவற்றில்,

தமமாவது :—

శ్లో॥ నిగ్రహోబాహ్యవృత్తీనాందమయిత్యభిధీయతే।

(இ - ள்.) பாஹ்யேந்திரிய நிக்கிரகம்;

சமமாவது :—

శ్లో॥ సదైవవాసనాత్యాగః శమోయమితిశబ్దితః।

(இ - ள்.) ஆந்தரிந்திரிய மனோநிக்கிரகங்களாம்;

உபரதியாவது :—

శ్లో॥ విషయేభ్యఃపరావృత్తిఃపరమోపరతిర్హిసా।

(இ - ள்.) சகலத்தையும் பகவத் வியாபகமாகவே பார்ப்பதாம்;

திதிக்ஷையாவது :—

శ్లో॥ సహనంసర్వదుఃఖానాంతితిక్షాసాశుభామతా।

(இ - ள்.) சகலதுக்கங்களேயும் விசாரணையால் விலக்கி சரீரத்தை வருத்தப்படுத்துங்கால் பகவத்தியானத்தில் மனதைநிறுத்தி துக்கத்தைப் பொறுத்துக்கொள்ளுதலாம்.

எப்படி எனில் இதன் விவரம் பகவத்கீதையில்,

శ్లో॥ మాత్రాస్పర్శాస్తుకౌన్తేయ శీతోష్ణసుఖదుఃఖదాః।
ఆగమాపాయినోఽనిత్యాస్తాంస్తితిక్షస్వభారత ॥

* భగవద్గీతా II. 14.

---

* இந்த கிரந்தகர்த்தாவால் செய்யப்பட்டிருக்கிற "ப[…]வத்கீதா கூடார்த்ததீபிகை" 2-ஆவது அத்தியாயம் 14-ஆவ[…] சுலோகத்தைப் பார்க்கவும்.

சிரத்தையாவது :—

శ్లో॥ నిగమాచార్యవాక్యేషు భక్తిశ్శ్రద్ధేతివిశ్రుతా ।

(இ-ள்.) வேதவாக்கியத்தில் நம்பிக்கையும் குருவாக்கியத்தில் விசுவாசமும் வைப்பதாம்.

சமாதானமாவது :—

శ్లో॥ చిత్తైకాగ్ర్యన్తుసలక్ష్యేసమాధానమితిస్మృతమ్॥

(இ - ள்.) குருவுபதேசித்த லக்ஷியத்தின் பிரகாரம் மனதை ஏகாக்கிர சித்தமாய் நிறுத்துவதே யாம்.

முமுக்ஷுத்வமாவது :—

శ్లో॥ సంసారబన్ధనిర్ముక్తిః కథంమేస్యాత్కదావిధే।
ఇతియాసుదృఢాబుద్ధిః వక్తవ్యాసాముముక్షుతా॥

(இ - ள்.) இந்த ஜநநமரண ரூபமான சம்சாரபந்தத்தினின்றும் விடுபடுவதெப்படி? அது எவ்விதமாக எனக்கு நேரிடும்? என்கிற விசாரத்திலேயே மனது பலப்பட்டு இதரவிஷயங்களில் மனது பின்னிடைகிறதே யாம்.

மேற்சொன்ன சாதன சதுஷ்டய முடையோருக்குபயோகமாக இந்த ஈசாவாஸ்யோபநிஷத்தினுடைய முதல் மந்திரமான இந்த ஞானகாண்டம் ஆரம்பிக்கப்படுகிறது.

---

## 1.

హరిః ఓమ్ ॥

శ్రు॥ ఈశావాస్యమిదగ్ం సర్వం యత్కిఞ్చ జగత్యాం జగత్।
తేనత్యక్తేనభుఞ్జీథా మాగృధః కస్యస్విద్ధనమ్ ॥ ౧॥

ஓம்॥ ஈசாவாஸ்யமிதகும்ஸர்வம் யத்கின்சஜகத்யாம்ஜகத்।
தேநத்யக்தேநபுஞ்சீதா மாக்ருதஃகஸ்யஸ்வித்தநம்॥ (க)

ఈశా
ஈசா — (சர்வபரிபூர்ணனாயும் பிரத்தியகாத்ம ஸ்வரூபனாயுமிருக்கிற ఈష్టే ఇతి ఈట్ என்னும் தாதுவிலிருந்து வந்தது ఈశ சப்தம்) ஈச்சுரனால்

వాస్యమ్
வாஸ்யம் — வியாபிக்கப்பட்டிருக்கிறது.

(కిమ్)
கிம் — (எது வியாபிக்கப்பட் டிருக்கிறதெனில்)

జగత్యామ్
ஜகத்யாம் — (அநேக பிரமாண்டங்களை யுடைய) பூமியில்

యత్కిఞ్చ
யத்கின்ச — அற்பமானாலுங்கூட (எவ்வளவு அற்பமானாலும் பகவத் வியாபியத்திற் குட்படாதவஸ்து இல்லவேயில்லை)

ఇదం, సర్వం, జగత్
இதம், ஸர்வம் ஜகத் — (நாமரூபங்களையுடைய) இந்த சகல பிரபஞ்சமும்

| | |
|---|---|
| తేన<br>தேந | அப்படிப்பட்ட சர்வாத்மக பாவனையால் (நாமரூபங்களையுடைய சகலமும் பகவத்ஸ்வரூபமே என்கிற சமதிருஷ்டியால்) |
| త్యక్త్వా<br>த்யக்த்வா | (அவைகளின்பேரிலுள்ள நான் எனது என்கிற அகங்கார மமகாரங்களை) விட்டு |
| (ఆత్మానమ్)<br>ஆத்மானம் | (தன்னை) பகவத்ஸ்வரூபத்தை |
| భుఞ్జీథాః<br>புஞ்ஜீதா: | (குருபதேசாநுஷ்டானத்தால்) அநுபவியுங்கள். |
| కస్యస్విత్<br>கஸ்யஸ்வித் | யாருடையவும் (தன்னுடையவும், பிறருடையவும்) |
| ధనమ్<br>தனம் | திரவியத்தை, பணத்தை, ஆஸ்தியை |
| మాగృధః<br>மாக்ருத: | கோரவேண்டாம் (தானுள்பட சகலமும் பகவத் ஸ்வரூபமே என்று தெரிந்து கொண்டவனுக்குக் கோரத்தகுந்தவஸ்துவேது? வேறு யாொன்றுமில்லை. |

தாத்பரியம்.

அநுருத ஜட துக்க ஸ்வரூபங்களையுடைய ஸ்தாவர ஜங்கம வகுப்பாயுள்ள நாமரூபங்களையுடைய இச்சகலப்பிரபஞ்சங்களும்,

శ్లో॥ సచ్చిదాత్మన్యనుస్యూతే నిత్యేవిష్ణౌప్రకల్పితాః।
వ్యక్తయోవివిధాస్సర్వా హాటకేకటకాదివత్ ॥*

ఆత్మబోధ - శ్లో - ౮.

(இ - ள்.) ஸத்யஞானனந்த ஸ்வரூபனுயும், ஸர்வாநுஸ்யூதனுயும் (சகலத்திலு மிருக்கிறவனுயும்) ஸர்வ வியாபகனுயு மிருக்கிற பகவத்ஸ்வரூபத்தில் தேவ திரியக்கு நர ஸ்தாவர ஜங்கமரூபங்களாயுள்ள சகல நாமரூப கோசர வஸ்துக்களும் தங்கத்தினுலுண்டாகும் ஆபரணங்களைப்போல கல்பிதங்களே யல்லாமல் வேறில்லை.

என்று சொல்லப்பட்டருக்கிற பிரகாரம் சர்வபரிபூர்ணனுயும் பிரத்தியகாத்ம ஸ்வரூபனுயு மிருக்கிற பகவத் ஸ்வரூபத்தினுல் காணப்படுகிறதும் காணப்படாததுவுமான சகலமும் வியாபிக்கப்பட்டிருக்கிறதே யல்லாமல்; பகவத் (ஆத்ம) ஸ்வரூபத்தைத் தவிர வேறே வஸ்துக்க ளில்லவேயில்லை யென்ற நிச்சயத்தால் ஈஷணத்திரயங்களிலே சேர்ந்த புத்திர மித்திர களத்திர தன கனக வஸ்து வாகனுதிகளில் எனது என்ற அபிமான ஸ்வரூபமாகிற மமகாரத்தையும் நான் என்னும் அகங்காரத்தையும், கர்த்ருத்துவ போக்த்ருத்துவத்தையும்விட்டு மேற்சொன்ன பகவத் (ஆத்ம) ஸ்வரூபத்தையே குருபதேசவழியாக அநுஷ்டித்து ஸ்வாநுபவத்தா லனுபவியுங்கள்.

---

* இந்த கிரந்தகர்த்தாவினுல் இயற்றப்பட் டிருக்கிற "ஆத்மபோத தத்துவார்த்ததீபிகை" எட்டாவது சுலோகத்தைப்பார்க்க.

శ్రుతి॥ నకర్మణా నప్రజయా ధనేన
త్యాగేనైకే అమృతత్వమానశుః।
పరేణ నాకం నిహితం గుహాయాం
విభ్రాజతే తద్యతయో విశన్తి॥

(కైవల్యోపనిషత్)

(இ-ள்.) பலாபேக்ஷையுடன் செய்யப்படுகிற கருமாநுஷ்டானத்தினலும், புத்திர மித்திர களத்திர பந்துக்களாலும், தனத்தினலும், மோக்ஷத்தை (ஜநநமரண ஸ்வரூபமான சம்சாரத்திலிருந்து விடுபடுதலை) யடைவது அசாத்தியமே. ஆனல் எப்படி சாத்தியமென்ருல், ஈஷணத்திரயங்களையும் விட்டு, குருபதேச ஞாநாநுஷ்டானத்தினலேயே வைராக்கியசாலியாலடைய முடியுமென்று,

கைவல்யோபநிஷத் வாக்கிய மிருக்கிறபடியால், தனம் முதலானவைகளிலுள்ள ஆசை அவித்தியாஸ்வரூபமாகையால், தன்னுடைய தனத்திலாகிலும் பிறருடைய தனத்திலாகிலும் அசாஸ்திரீயமான ஆசையை வைக்கவேண்டாம். என்ருல், பகவத் ஸ்வரூபமே (ஸ்வஸ்வரூபமே) சர்வபரிபூர்ணமா யெங்கும் வியாபித்திருக்கிறதென்று நிச்சயமாய் ஸ்வாநுபவத்தினல் தெரிந்துகொண்டவனுக்கு, இச்சிக்க (கோர)த்தகுந்த வஸ்து கிடையவே கிடையாதென்று இந்த முதல் மந்திர முபதேசிக்கிறது.

---

## இரண்டாவது மந்திரம்.

### அவதாரிகை.

ஸ்வாநுபவமென்ற நிஷ்டையையடைய அபேக்ஷிக்கிற முமுக்ஷு, ஈஷணத்திரயங்களையும்விட்டு நிஷ்டையுடையவனாகி தன்னை ரக்ஷித்துக்கொள்ள வேண்டுமென்று முதல் மந்திர முபதேசித்தபோதிலும், அப்படியாசரிக்கச் சாமர்த்தியமில்லாதவனும் பாஹ்ய ஆந்தர இந்திரிய நிக்கிரகமில்லாதவனுமான மோக்ஷாபேக்ஷையுடையவர்கள் இரக்ஷிக்கப்படுவதற்காக வேதமானது மற்றொருமார்க்கத்தை இந்த இரண்டாவது மந்திரத்தாலுபதேசிக்கிறது. எப்படியெனில்:—

2.

శ్రు॥ కుర్వన్నేవేహ కర్మాణి జిజీవిషేచ్ఛతగ్ సమాః।
ఏవంత్వయినాన్యథేతోఽస్తి నకర్మలిప్యతే నరే॥ ౨॥

சுருதி॥ குர்வந்நேவேஹகர்மாணி ஜிஜீவிஷேச்சதகும்ஸமாஃ।
ஏவம்த்வயிநாந்யதேதோஸ்தி நகர்மலிப்யதேநரே॥ (உ)

| | |
|---|---|
| శతంసమాః<br>சதம்ஸமாஃ | (புருஷனுக்குள்ள பூரணஆயுசு) நூறு வருஷங்களென்று (சாஸ்திர நிர்ணயம்) |
| ఇహ<br>இஹ | இந்தப் பிரபஞ்சத்தில் (இந்த ஜன்மத்தில் அதாவது பூர்வகர்மாநுசாரமாய் எவ்வளவு வருஷகாலம் ஜீவித்திருக்க வேண்டியதா யேற்பட்டிருக்கிறதோ அப்படிப்பட்ட) |

| | |
|---|---|
| కర్మాణి<br>கர்மாணி | (அவ்வளவுவருஷம் சாஸ்திரத்தினல் இவனிந்த கர்மத்துக் கருகனென்று விதிக்கப்பட்டிருக்கிற) அக்கினி ஹோத்ராதி கர்மங்களை |
| కుర్వన్నేవ<br>குர்வந்நேவ | (சித்தசுத்திக்காக பலாபேக்ஷையை விட்டு) தப்பாமல் செய்யவேண்டியதேயாம். |
| ఏవమ్<br>ஏவம் | இந்தப்பிரகார (த்தைத்தவிர) |
| త్వయి<br>த்வயி | (சரீராபிமானத்தையுடைய) உன்விஷயமாக |
| ఇతః<br>இதஃ | (சாஸ்திரவிகித வர்ணாச்சிரம தர்ம கர்மங்களின் பலன்களை அபேக்ஷியாமல் செய்யவேண்டிய) இந்த விதத்தைத்தவிர |
| అన్యథా<br>அந்யதா | வேறொருமார்க்கமானது |
| నాస్తి<br>நாஸ்தி | இல்லை. |
| నరే<br>நரே | (பலன்களை யபேக்ஷிக்காமல் கர்மங்களை யாசரிக்கிற) மனிதனுன உன்னிடத்தில் (உன்னை) |
| కర్మ<br>கர்ம | (மேற்சொன்ன அக்கினி ஹோத்ராதி) கர்மமானது |

| | |
|---|---|
| నలిప్యతే<br>நலிப்யதே | பந்தத்தை யுண்டுபண்ண மாட்டாது. (மோக்ஷமார்க்கத்திற்குத் தடையா கமாட்டாது.) |

శ్లో॥ లోకేస్మిన్ద్వివిధానిష్ఠా పురాప్రోక్తామయాఽనఘ।
జ్ఞానయోగేనసాఙ్ఖ్యానాం కర్మయోగేనయోగినామ్॥*

భగవద్గీతా. III. 3.

(இ - ள்.) ஈஷணத்திரயங்களையும் விட்டு நிக்கிரகங்களை யுடையோர்களுக்கு ஞானயோகத்தினலேயும், இப்படிப்பட்ட ஞானயோகத்தை யடைய அசக்தர்களாயும் இந்திரிய மனோநிக்கிரகங்க ளற்றவர்களாயும் மோக்ஷாபேக்ஷை யுடையவர்களாயு மிருக்கிறவர்களுக்கு, நிஷ்காம கர்ம யோகத்தினலேயும் மோக்ஷத்தை யடையலாமென்று சொல்லப்பட்டிருக்கிறது.

ஞானயோகத்தினல் மோக்ஷத்தை யடையலாமே யன்றி, கர்மத்திற்கும் அக்ஞானத்திற்கும் விரோத மில்லையாகையால் கர்மமானது அக்ஞானத்தை யபிவிர்த்திசெய்யுமே யல்லாது ஞானத்தை யுண்டாக்க மாட்டாதென்று

శ్లో॥ అవిరోధితయాకర్మ, నావిద్యాంవినివర్తయేత్।
విద్యాఽవిద్యాం నిహన్త్యేవ తేజస్తిమిరసంఘవత్॥

ఆత్మబోధ - శ్లో - 3.

என்று ஆத்மபோத தத்துவார்த்ததீபிகை 3 - வது சுலோகத்தில் சொல்லப்பட்டிருக்கிறபடியால், கர்மா

* பகவத்கீதை கூடார்த்ததீபிகையின் 3-வது அத்தியாயம், 3-வது சுலோகத்தில் பார்க்க.

நுஷ்டானத்தினால் மோக்ஷ முண்டாகுமென் றெப்படிச் சொல்லக்கூடுமெனில்,

శ్రు॥ తమేతంవేదానువచనేనవివిదిషన్తి।
బ్రహ్మచర్యేణతపసాశ్రద్ధయాయజ్ఞేనానాశకేన॥
(బృహదారణ్యం.)

(2)

(இ - ள்.) சாஸ்திரத்திற் சொல்லப்பட்டிருக்கிறபடி வர்ணாச்சிரம தர்மோசித கர்மங்களை பகவதர்ப்பணமாகச் செய்வோர்கள் பரம்பராக்கிரமமாய் சித்தசுத்தியையும் அதனால் ஞானத்தையும், ஞானத்தினால் மோக்ஷத்தை யடையலாமென்றும்,

శ్లో॥ కర్మణ్యేవాధికారస్తే మాఫలేషుకదాచన। 47.

శ్లో॥ బ్రహ్మణ్యాధాయకర్మాణి సఙ్గంత్యక్త్వాకరోతియః।
లిప్యతేనసపాపేన పద్మపత్రమివాంభసా॥ 10.

శ్లో॥ తస్మాదసక్తస్సతతం కార్యంకర్మసమాచర।
అసక్తోహ్యాచరన్కర్మ పరమాప్నోతిపూరుషః ॥ 19.
భగవద్గీతా. III. 47, 10, 19.

శ్లో॥ ఆదౌస్వవర్ణాశ్రమవర్ణితాః।
క్రియాఃకృత్వాసమాసాదితశుద్ధమానసః।
(శ్రీరామగీత)

శ్లో॥ స్వవర్ణాశ్రమధర్మేణ తపసాహరితోషణాత్।
సాధనంప్రభవేత్పుంసాం వైరాగ్యాదిచతుష్టయమ్॥
(అపరోక్షానుభూతి.)

இவைமுதலான சுருதி ஸ்மிருதிவாக்கியங்கள், பலனை இச்சியாமல் ஆசரிக்கப்படும் சாஸ்திரவிகித கர்மங்கள் சித்தசுத்தியையும், அதன்மூலமாய் ஞானத்தையும் பிற்பாடு மோக்ஷத்தையும் அடையச்செய்யுமென்பதில் சாக்ஷியங்களா யிருக்கிறதேயல்லாமல், பந்தத்தை யுண்டாக்குமென்று சொல்லவில்லை. ஆத்மபோத தத்துவார்த்த தீபிகையில் 3-வது சுலோகத்திலுள்ள கர்ம சப்தத்திற்கு காம்யகர்மமென்று அர்த்தமேயல்லாமல் நிஷ்காம கர்மமென்று கிரகிக்கக்கூடாது. ஆகையால் முதல்மந்திரானுஷ்டானஞ் செய்யமுடியாத பேர்கள் சாஸ்திரவிகித கர்மங்களை பலனை யபேக்ஷியாமல் சித்தசுத்தியின் பொருட்டு அநுஷ்டிக்காம லிருப்பது தப்பென்று,

శ్రు॥ యావదిచ్ఛా తావత్కర్మ స్వధికారః॥

(இ - ள்.) எதுவரைக்கும் இப்பிரபஞ்சத்தின்பேரி லாசையிருக்குமோ அதுவரைக்கும் கர்மாநுஷ்டான மில்லாமல் முடியாது.

என்று சுருதி சொல்லுகிறபடியால், அப்பேர்க்கொத்தவனுக்கு நிஷ்காம கர்மாநுஷ்டானத்தைத்தவிர நன்மையை யடையவதற்கு இதரமார்க்கமில்லையென்று

స్మృ॥ ద్వావిమావథపన్థానౌ యత్ర వేదాః ప్రతిష్ఠితాః।
ప్రవృత్తిలక్షణో ధర్మో నివృత్తిశ్చ విభావితః॥

(இ - ள்.) ஜநநமரண சம்சாரத்தினின்றும் விடுபடுவதற்காக இரண்டே மார்க்கங்களுண்டு. முக்கியசாதனமானது நிவிர்த்திமார்க்கமாயுள்ள ஞாநநிஷ்டை; இரண்டாவது பிர

வர்த்தி மார்க்கமென்ற நிஷ்காம கர்மானுஷ்டானம்; என்று வியாசமஹர்ஷி சொல்லுகிறார்.

இவ்விரண்டைத்தவிர வேறேமார்க்க மில்லவேயில்லையென்பதை இந்த இரண்டாவது மந்திர முபதேசிக்கிறது.

---

## மூன்றாவது மந்திரம்.

### அவதாரிகை.

மேற்சொன்ன இரண்டு மார்க்கங்களையும் விட்டு இப்பிரபஞ்சத்தி னுடையவும் சுவர்க்காதிகளி னுடையவும் சுகமே சுகமென்று அவிவேகத்தால் நினைத்து, பலாபேக்ஷையுடன் கர்மங்களை யாசரித்து விஷயாசக்தர்களாயிருக்கும் காம்யகர்மிகளாகிய கற்றறிமோழைகளைக் குறித்து விவரமாய்ச் சொல்லுகிறது. அதாவது:—

3.

శ్రు॥ అసూర్యానామ తేలోకా
అన్ధేన తమసాఽవృతాః ।
తాగ్ స్తే ప్రేత్యాభిగచ్ఛన్తి
యేకే చాత్మహనో జనాః ॥3॥

சுருதி॥ அசூர்யாநாம தேலோகா
அந்தேன தமஸா'வ்ருதா:।
தாகும் ஸ்தேப்ரேத்யாபிகச்சந்தி
யேகேசாத்மஹநோ ஜநா:॥ (௩)

అన్ధేన
அந்தேந
(காமக்குரோத ராகதுவேஷ லோப மோஹ மதமாத்சர்ய ஈர்ஷை டம்ப தர்ப்ப அசூயை அகங்கார மமகாரங்களென்ற) அக்ஞான ஸ்வரூபமாகிற

తమసా
தமஸா
(இப்பிரபஞ்சத்தினுடையவும் சுவர்காதிகளினுடையவும் சுகவிஷயங்களிலே விசாரணையில்லாத) அவிவேகத்தினால்

ఆవృతాః
ஆவ்ருதா:
(மேற்சொன்ன இரண்டு மந்திராநுஷ்டானங்களி லொன்றையும் அநுஷ்டியாமல், தனம், முதலான ஆசையில்) முழிகினவர்களும்

ఆత్మహనః
ஆத்மஹநா:
(சர்வபரிபூர்ணமாயுள்ள பகவத் ஸ்வரூபத்தை (தன்னை) இல்லையே யில்லையென்று தன்னை மறந்து ஸ்வஸ்வரூபஞான சூனியர்களான) ஆத்மஹந்தர்களுமான (தற்கொலை செய்பவர்களுமான)

జనాః
ஜநா:
(காம்ய கர்மாசரணை செய்யும் அவிவேக) ஜனங்கள்

యేకేచ
யேகேச
(இந்தஜாதி அந்தஜாதியென்றில்லாத) எவரொவரோ; (என்றால் அவிவேகிக ளெந்தஜாதியா யிருந்தபோதிலும்)

తే
தே
அவர்கள்

| | |
|---|---|
| ప్రేత్య<br>ப்ரேத்ய | இச்சரீரமிறந்தபிற்பாடு |
| అసూర్యానామ<br>அஸூர்யாநாம | =అసుషు ప్రాణేషు రమన్త ఇత్యసురాః = ప్రాణపోషకాః, జ్ఞానహీనాః= அசுத்த (இழிவான) ஜன்மத்தில்பிறந்து அதையே சுகமாக ரமிக்கிறவர்கள் அசுரரெனப் படுவார்கள். ஞானஹீனர்களாய் பிராணபோஷகத்தில் மாத்திரம் பிரவர்த்தி யுள்ளவர்கள்) அசுர சுகாநுபவ முடைய |
| యే, లోకాః,<br>யே, லோகாঃ, | எந்த ஜன்மங்கள் |
| సన్తి<br>ஸந்தி | உண்டோ |
| తే<br>தே | (காம்யகர்மபல சாதனமாயுள்ள) அப்படிப்பட்ட |
| (తాన్, లోకాన్)<br>தாந், லோகான் | (ஸ்தாவர ஜங்கமங்களா யுள்ள ஜன்மங்களை) |
| అభిగచ్ఛన్తి<br>அபிகச்சந்தி | அடைகிறுர்கள் (என்றுல்அக்ஞானத்தால் பிறந்திறந் துழலுவார்களாகையால், இரண்டாவது மந்திரத்தில் சொன்ன நிஷ்காமகர்மாநுஷ்டானத்தைச்செய்து சித்த சுத்தியையும், அதன்மூலமாய் முதல்மந்திராநுஷ்டானத்தைச் செய்து ஞானத்தையும், தன்மூலமாய் மோக்ஷத்தையு |

மடையப் பிரயத்தனம் செய்யவே
ண்டிய தவசியம்.)

தாத்பரியம்.

శ్రు॥ ప్లవా హ్యేతే అదృఢా యజ్ఞరూపా
అష్టాదశోక్తమవరంయేషుకర్మ।
ఏతచ్ఛ్రేయోయేఽభినన్దన్తిమూఢాః
జరామృత్యుంతేపునరేవాపియన్తి॥
నాకస్యపృష్ఠేసుకృతేఽనుభూత్వే
మం లోకంహీనతరం వావిశన్తి॥

శ్లో॥ అనేకచిత్తవిభ్రాన్తా మోహజాలసమావృతాః।
ప్రసక్తాఃకామభోగేషు పతన్తినరకేఽశుచౌ॥ 16॥

తానహంద్విషతఃక్రూరాన్ సంసారేషునరాధమాన్।
క్షిపామ్యజస్రమశుభా నాసురీష్వేవయోనిషు॥ 19॥

ఆసురీంయోనిమాపన్నా మూఢాజన్మనిజన్మని।
మామప్రాప్యైవకౌన్తేయ తతోయాన్త్యధమాంగతిమ్॥20॥

భగవద్గీతా. XVI. 16, 19, 20.

(இ - ள்.) இந்தச்சுருதி ஸ்மிருதி வாக்கியங்கள் காமக் குரோதாதிகளையும் அகங்கார மமகாரங்களையும் இப்படிப் பட்டதென்று விசாரிக்காமல், அவிவேகத்தினால் இப்பிரபஞ்சசுகத்தையும் சுவர்க்காதி சுகங்களையும் இச்சித்து காம்யகருமங்களை ஆசரிக்கிறவர்கள், நரகத்திற்குச் சமானமான அசுர யோனியில் பிறந்து இறந்துழலுவார்களென்று கூறுகிறது.

இந்த அம்சத்தை இந்த மூன்றாவது மந்திரம் உபதேசிக்கிறது. காமம், குரோதம், லோபம் இம் மூன்றும் எல்லா துர்குணங்களுக்கும் காரணமாகையால் இவைகளை அவசியம் விடவேண்டியதென்று,

శ్లో॥ త్రివిధంనరకస్యేదం ద్వారంనాశనమాత్మనః।
కామఃక్రోధస్తథాలోభ స్తస్మాదేతత్త్రయంత్యజేత్॥

భగవద్గీతా. XVI. 21.

காமக்குரோதாதிகள் காம்யகர்மத்திற்குக் காரணமாகையால் அப்படிப்பட்ட துர்க்குணங்களை விட்டுவிட்டு, இரண்டாவது மந்திராநுஷ்டானமான நிஷ்காம கருமத்தினுல் சித்தசுத்தியையும் அதன்மூலமாய் ஞானத்தையும் பிறகு ஜநநமரண சம்சாரத்திலிருந்து விடுபடுதலென்கிற மோக்ஷத்தையும் அடையவேணுமென்று,

శ్లో॥ కర్మజంబుద్ధియుక్తాహి ఫలంత్యక్త్వామనీషిణః।
జన్మబన్ధవినిర్ముక్తాః పదంగచ్ఛన్త్యనామయమ్॥

భగవద్గీతా. II. 51.

வது சுலோகம் சொல்லுகிறது. ஆகையால் புத்திமான்கள் காம்யகர்ம புத்தியைவிட்டு முதல் இரண்டு மந்திராநுஷ்டானங்களை ஒன்றின் பின்னென்றாய் ஆசரிக்கப்படுவார்களானுல் தவருமல் பகவானை (ஆத்மானுபவத்தை) யடையலாமென்று தெரிந்துகொள்ளவும்.

---

## நான்காவதுமந்திரம்.

### அவதாரிகை.

எந்த ஆத்ம சுவரூபத்தை ஸ்வாநுபவத்தால் தெரிந்துகொள்ளாமையால் தற்கொலை செய்தவர்களாகிவிடும் அவிவேகிகள், இச்சம்சாரத்தில் பிறந்திறந்துழலுவார்களோ, பரமபுருஷார்த்தத்திற்கிது விரோத

மென்கிற எண்ணத்துடன் எந்த ஆத்மஸ்வரூபாநுபவ ஞானிகள், இச்சம்சாரத்தினின்றும் விடுபட்டு முக்தர்களாகி மோக்ஷத்தை யடைவார்களோ, அப்பேர்க்கொத்த ஆத்ம சுவரூபமானது இந்த நான்காவது மந்திரத்தா லுபதேசிக்கப்படுகிறது.

4.

శ్రు॥ అనేజదేకం మనసోజవీయో
నైనం దేవా ఆప్నువన్పూర్వమర్షత్।
తద్ధావతోఽన్యానత్యేతితిష్ఠ
త్తస్మిన్నపోమాతరిశ్వాదధాతి॥ ४॥

சுருதி॥ அநேஜ தேகம் மநஸோ ஜவீயோ
நைநம்தேவா ஆப்நுவந் பூர்வமர்ஷத்।
தத்தாவதோஅந்யாநத்யேதி திஷ்டத்
தஸ்மிந்நபோ மாதரிச்வா ததாதி॥ (ச)

ఏకం
ஏகம் — (சகலபூதங்களினுடைய உள்ளும்புறம்பும் மேலுங்கீழும் பக்கங்களிலும் எங்கும் வியாபித்து சர்வபரிபூர்ணமாய் விக்ஞான கனஸ்வரூபியாயிருக்கிறபடியால்) ஒன்ருகவேயுள்ளது (அதினுலேயே)

అనేజత్
அநேஜத் — அசையாததும் (ஆகையினுலே)

మనసః
மனஸ: — (சங்கற்ப விகல்பாத்மகமானதும், க்ஷணத்தி லனேக பிர்ம்மாண்டங்களில் சஞ்சரித்துவரக்கூடிய வேகத்தையுடையதுமான) மனதைக்காட்டிலும்

| | |
|---|---|
| పూర్వమ్ பூர்வம் | (ஆகாயத்தையும் வியாபித்து நிற்கும் சர்வபரிபூர்ண வஸ்து வாகையால் மனதைக்காட்டிலும்) முன்னமே |
| అర్షత్ அர்ஷத் | போயிருக்கிறது. (ஆகையால்) |
| జవీయః ஜவீயஃ | (மனதைக்காட்டிலும்) அதிகவேகத்தை யுடையதுமான |
| ఏనత్ ஏனத் | (மேற்சொல்லப்பட்ட) இந்த ஆத்மாவை |
| దేవాః தேவாஃ | இந்திரியங்கள் |
| నాప్నువన్ நாப்னுவன் | (அடையமாட்டா.) தெரிந்துகொள்ள முடியா. |
| (తస్మాత్) தஸ்மாத் | (அக்காரணத்தினல்) |
| ధావతః தாவதஃ | (பிரவிருத்தி நிவிருத்தி விஷயமாய்) அதிவேகமாய் ஓடுகிற |
| అన్యాన్ அந்யான் | (தனக்குவேருன) மனோவாக்காதி இந்திரியங்களை |
| తత్ தத் | அந்தஆத்மா |
| అత్యేతి அத்யேதி | அதிக்கிர மித்தாற்போல (இந்திரியம் மனது முதலானவைகளால் கிரகிக்க முடியாததாய்) |

| | |
|---|---|
| తిష్ఠత్ (తిష్ఠతి)<br>திஷ்டத் | இருக்கிறது. |
| తస్మిన్<br>தஸ்மின் | (நித்திய சைதந்ய ஸ்வபாவமான) அந்த ஆத்மஸ்வரூபத்தில் |
| మాతరిశ్వా<br>மாதரிச்வா | (சகலபிரபஞ்சங்களும் எதை அனுசரித்து சகலகாரியங்களையும் செய்கின்றனவோ அப்படிப்பட்ட பிராணாதிக் கிரியாஸ்வரூபமான) சூத்திராத்மாவாய் |
| అపః<br>அப: | (பிராணிகளுடைய சேஷ்டா லக்ஷணமாயும், அக்கினி சூரியன் முதலானவைகளின் தகனம்ஜோதி, முதலானதுகளான) கர்மங்களை |
| దధాతి<br>ததாதி | விபஜிக்கிறது. (வேறுவேறாய் பிரித்துக்கொடுக்கிறது) |

தாத்பரியம்.

శ్లో॥ బాల్యాదిష్వపిజాగ్రదాదిషుతథా సర్వాస్వవస్థాస్వపి।
వ్యావృత్తాస్వనువర్తమాన మహమిత్యన్తస్స్ఫురన్తంసదా॥
స్వాత్మానంప్రకటీకరోతి॥ (దక్షిణామూర్త్యష్టకమ్)

பகவான் (ஆத்மா) வாலிப, யவ்வன, கௌமார, வார்த்திக, ஜாகிரத், ஸ்வப்ந, சுழுத்தி, தூஷ்ணீம்பாவம், மூர்ச்சை, மரணம், ஸ்வர்க்கம், நரகாதி சகலாவஸ்தைகளிலும் சர்வபரிபூர்ணனாய் இரண்டற்றிருக்கையால் அசையாததாயிருக்கிறது. ஆகையினாலேயே அதிவேகமாய் ஓடுகின்ற மனதைக்காட்டிலும் முன்னமே அந்தந்த இடங்களில் நிறைந்திருக்கிறபடியால்,

శ్లో॥ సమస్తేషువస్తుష్వనుస్యూతమేకం
సమస్తానివస్తూనియన్నస్పృశన్తి
వియద్వత్సదాశుద్ధమచ్ఛస్వరూపం॥
(హస్తామలకస్తోత్రం)

எல்லாவற்றிலும் அநுஸ்யூதமாய் நிறைந்திருந்த போதிலும் ஒன்றிலும் சம்மந்தப்படாமலிருக்கும் ஆகாசத்தைப்போல சம்மந்தமற்றதா யிருக்கையாலும்,

శ్రు॥ యతోవాచోనివర్తన్తే అప్రాప్యమనసాసహ।

என்கிற சுருதியின்படி மனதினுலும் வாக்குமுதலான இந்திரியங்களாலும் தெரிந்துகொள்ள முடியாததாயிருக்கிறது. ஆகையால்,

శ్రు॥ శ్రోత్రస్యశ్రోత్రంమనసోమనో
యద్వాచోహవాచంసఉప్రాణస్యప్రాణ
శ్చక్షుషశ్చక్షుః॥ (కేనోపషత్ I - 2)

ஆத்ம மனேவாக்காதி இந்திரியங்களுக்கு எட்டாததாயும் இப்பிரபஞ்சம் முதலாயுள்ள சகலத்தையும் சூத்திராத்ம ஸ்வரூபத்தினுல் எல்லாவற்றையும் தானே பிரகாசிக்கச் செய்துகொண்டு அந்தந்தப் பிரவிருத்தி நிவிருத்தி காரியங்களை விபஜிக்கிறதாகவும் தெரிந்துகொள்ளவேண்டியது.

---

## ஐந்தாவதுமந்திரம்.

### அவதாரிகை.

ஆத்மஸ்வரூப விவரத்தைக்குறித்து 4-வது மந்திரத்தில் காரணரூபமாய் மாத்திரம் சொல்லப்பட்டது.

அப்படிப்பட்ட ஆத்மா எவ்விதமானதோ, தூரத்திலிருக்கிறதோ அல்லது சமீபத்திலிருக்கிறதோ, தூரமானல் எவ்வளவு தூரமோ, சமீபமானல் எவ்வளவு சமீபமோ என்னும் இப்பேர்க்கொத்த சந்தேகங்கள் நிவர்த்திக்கும் மார்க்கத்தையும், அதினநுஷ்டான மூலமாய் ஆத்மஸ்வரூபாநுபவத்தை யடைவிக்கச் செய்வதற்காகவேண்டி ஆத்மாவினுடைய காரணகாரியஸ்வரூபங்களை இவ்வைந்தாவது மந்திரம் உபதேசிக்கிறது.

5.

శ్రు॥ తదేజతి తన్నైజతి తద్దూరే తద్వన్తికే।
తదన్తరస్య సర్వస్య తదుసర్వస్యాస్య బాహ్యతః॥ ౫॥

சுருதி॥ ததேஜதி தந்நேஜதி தத்தூரே தத்வன்திகே।
ததன்தரஸ்ய ஸர்வஸ்ய தது ஸர்வஸ்யாஸ்ய பாஹ்யதஃ(ரு)

తత్ தத் — அந்தபகவத் (ஆத்ம) வஸ்து, (பிரம விஷ்ணு சிவஸ்வரூபமாகவும், ஸ்தாவரஜங்கம ஸ்வரூபங்களாயு மிருக்கின்ற எல்லாம், தத்ஸ்வரூபமாயிருந்தபோதிலும் சத்குரு முகமாய் விசாரணை செய்யா தவர்களுக்கு உபாதியைப்பற்றி)

ఏజతి ஏஜதி — சலிக்கிறது (அசைகிறது) போலிருக்கிறது.

తత్ தத் — அந்தபகவத் (ஆத்ம) வஸ்து

| | |
|---|---|
| నైజతి<br>நைஜதி | (தத்துவமஸி முதலான மஹாவாக்கியார்த்த விசாரணைசெய்த பேர்களுக்கு) அசைவற்றதாயிருக்கும். |
| తత్<br>தத் | அந்தபகவத் (ஆத்ம) வஸ்து |
| దూరే<br>தூரே | (வேதாந்தக் கிரந்தங்களை படித்ததினாலும் பிறருக்கு சொல்லுவதினாலும் அல்லது வேதாந்தப் பிரவசனங்களைக் கேட்டதினாலும், தான் ஞானியாய் விட்டதாய் எண்ணிக்கொண்டு, காமக்குரோதாதிகளைபாஹ்யாந்தரேந்திரிய நிக்கிரக சாதனையால் நிவர்த்தித்துகொண்டு சத்குருபதேசத்தை யடைந்து ததநுஷ்டானஞ் செய்து ஸ்வாநுபவத்தை யடையாத அவிவேகிகளுக்கு நூறுகோடி வருஷங்களுக்குப் பின்பாகிலும் ஸ்வாநுபவ முண்டாகாதாகையால் அப்படிப் பட்டவர்களுக்கு) அதிதூரத்திலும் |
| తత్, ఉ (తద్వత్)<br>தத், உ (தத்வத்) | அவ்விதமாகவே |
| అన్తికే<br>அன்திகே | (சாதன சதுஷ்டய சம்பன்னர்களாகி சத்குருபதேசத்தையடைந்து தியான நிஷ்டைசெய்தவர்களாயுள்ள ஞானிகளுக்கு ஸ்வாநுபவத்தால் எப்போது மனுபவிப்பார்களாகையால் அப்படிப்பட்டவர்களுக்கு) அதிகச் சமீபத்திலும் (இருக்கிறது.) |

| | |
|---|---|
| తత్<br>தத் | அந்த ஆத்மவஸ்து |
| సర్వస్య<br>ஸர்வஸ்ய | சகலமான |
| అస్య<br>அஸ்ய | சராசரரூபமான இந்தப் பிரபஞ்சத்தி னுடைய |
| అన్తః, (అస్తి)<br>அன்தஃ, (அஸ்தி) | (விஞ்ஞானகந ஸ்வரூபமான அந்தர் யாமியாய் சகலப் பிராணிகளுடை ய) உள்ளே - மத்தியில் (ஹிருதயத் திலிருக்கிறது.) |
| తత్, ఉ<br>தத், உ | அந்த ஆத்மவஸ்து |
| అస్య<br>அஸ்ய | இந்த |
| సర్వస్య<br>ஸர்வஸ்ய | (நாமரூபக்கிரியாத்மகமான) சகல ஜக த்துக்கும் |
| బాహ్యతః,<br>பாஹ்யதஃ | வெளியிலும் |
| (అస్తి)<br>(அஸ்தி) | (இருக்கிறது.) |

### தாத்பரியம்.

శ్రు॥ పరమాత్మైపిచ — బ్రహ్మైవపరమాత్మా.

"సబ్రహ్మా, సవిష్ణు, స్సరుద్ర, స ఇన్ద్ర), స్సశమన, స్ససూర్య, స్స చన్ద్ర), స్తేసురా, స్తే అసురా, స్తేపిశాచా, స్తేమ

నుష్యా, స్త్రాస్త్రియ, స్తే పశ్వాదయ, స్తత్ స్థావరం, తే బ్రాహ్మణాదయః, సర్వంఖల్విదంబ్రహ్మ, నేహనానాస్తి కించన" ॥ (నిరాలంబోపనిషత్)

சகலமும் பகவத் (ஆத்ம) ஸ்வரூபமே என்கிற நிராலம்போபநிஷத் வாக்கியப்பிரகாரமும்,

శ్లో॥ పరిత్రాణాయసాధూనాం వినాశాయచదుష్కృతాం।
ధర్మసంస్థాపనార్థాయ సమ్భవామియుగేయుగే॥

భగవద్గీతా. IV. 8.

சுலோகத்தில் சொல்லப்பட்டிருக்கிற படியாலும், காணப்படுகிறதும் காணப்படாததுமான இச்சகலபிரபஞ்சங்களும் பகவத் (ஆத்ம) ஸ்வரூபமேயாகையால், துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனத்தின் பொருட்டு அவதரித்த இராம கிருஷ்ணாதி யவதாரங்களும், சகுணத்தியான சாதனத்தின் பொருட்டேற்பட்ட மாயோபாதிகர்களான பிர்ம்ம விஷ்ணு உருத்திராதிகளும், அவித்யோபாதிகர்களான ஜீவர்களும், ஸ்தாவர ஜங்கமாதிகளும்,

శ్లో॥ సచ్చిదాత్మన్యనుస్యూతే నిత్యేవిష్ణౌప్రకల్పితాః।
వ్యక్తయోవివిధాస్సర్వా హాటకేకటకాదివత్॥

(ఆత్మబోధ. శ్లో - 8.)

என்று சொல்லப்பட்டிருக்கிற பிரகாரம் தங்கத்தால் செய்யப்பட்ட நகைகள் தங்கத்தைத்தவிர வேறல்லாதுபோல பகவானை (ஆத்மாவை) த்தவிர வேறில்லையென்று தெரிந்துகொள்ளாத தத்துவ விசாரணை

சூனியர்களான அவிவேகிகளுக்கு ஆத்ம சலிக்கிற (அசைகிற) தாகவும்,

శ్లో॥ బ్రహ్మైవాహమిదంజగచ్చ సకలంచిన్మాత్రవిస్తారితం।
సర్వంచైతదవిద్యయాత్రిగుణయాఽశేషంమయాకల్పితం।
ఇత్థంయస్యదృఢామతిఃసుఖతరేనిత్యేపరేనిర్మలే।
చణ్డాలోఽస్తుసతుద్విజోఽస్తుగురురిత్యేషామనీషామమ॥
(మనీషాపంచకం.)

சகலமும் ஆத்மஸ்வரூபமே என்று, குருமுகமாகத் தத்துவிசாரணைசெய்து மகாவாக்கியார்த்தத்தை யுபதேசிக்கப்பெற்று ததநுஷ்டானத்தால் ஸ்வாநுபவத்தை யடைந்திருக்கும் ஞானிகளுக்குச் சலிக்காத (அசையாத) தாயும், மஹாவாக்கியங்க ளெவை? எனின்,

பிரக்ஞானம் பிர்மம், அஹம்பிர்ம்மாஸ்மி, தத்துவமஸி, அயமாத்மா பிர்ம்ம, என நான்காம்.

ஆத்மஸ்வரூபவிசாரணையாவது எது எனில், பிரதிவஸ்துவினுடைய ஸ்வரூபத்தை நிரூபிக்கிறதற்கு,

1. ஸ்வரூபலக்ஷணையென்றும்,
2. தடஸ்தலக்ஷணையென்றும்,
3. அதத்வ்யாவிருத்திலக்ஷணையென்று மூன்றுவிதமான லக்ஷணங்க ளாவசியம்.

ஒருபதார்த்தத்தினுடைய குணாதிசயங்களைச் சொல்லி நிரூப்பிக்கிறது ஸ்வரூபலக்ஷணை யெனப்படும். அந்த பதார்த்தையே திருஷ்டாந்தத்தால் நிரூபிப்பது

தடஸ்தலக்ஷணை யெனப்படும்; நிரூபிக்கப்பட்ட பதார்த்தத்தைக்காட்டிலும் வேருயுள்ள இதரபதார்த்தங்களை நிஷேதித்து பதார்த்த நிர்ணயஞ்செய்தல் அதத்வ்யாவிருத்தி லக்ஷணையெனப்படும். இப்படிப்பட்ட மூன்று லக்ஷணைகளால் சகலசுருதிகளும் பகவத் (ஆத்ம) ஸ்வரூபத்தைப் பிரதிபாதிக்கின்றன. எப்படியெனில்:—

శ్రు॥ సత్యంజ్ఞానమనన్తంబ్రహ్మ॥

பிர்ம்மமானது (ஆத்மாவானது) சத்யஞானனந்த ஸ்வரூபமென்கிற சுருதிவாக்கியமே ஸ்வரூபலக்ஷணை எனப்படும்; இதனுல் சத்யஞானனந்த ஸ்வரூபமான ஒரு பிர்ம்மமான துண்டென்று சுவர்க்காதிகளைப்போல பிர்ம்மத்தை பரோக்ஷமாய் தெரிந்துகொள்ளலாம். இப்படிப்பட்ட லக்ஷணத்தையுடைய ஒரு பிர்ம்மம் (ஆத்மா) இருக்கிறதாய் சுருதிசொல்லுகிற தல்லவா என்கிற கௌரவத்தால் (விசுவாசத்தைக்கொண்டு) அப்படிப்பட்ட பிர்ம்மமிருக்குமென்று பரோக்ஷமாகத் தெரிந்த போதிலும், அது மெய்யோ பொய்யோ என்கிற சமுசயம் ஸ்வரூபலக்ஷணத்தால் நிவர்த்தியாகமாட்டாது. சமுசயநிவர்த்திக்காகவேண்டி (தடஸ்தலக்ஷணையால்) திருஷ்டாந்தத்தால் நிரூபிக்கவேண்டியதுஅவசியம். எப்படி எனில்:—பானை சட்டி கலயம் முதலானவைகள் எதிலிருந் துண்டாகின்றனவோ, அந்த நாமரூபங்கள் எதினுல் நிலைத்திருக்கின்றனவோ, அந்த கடம் முதலியவைகள் எதில் லயிக்கின்றனவோ அஃதே மண்ணென்றுற்போல,

శ్రు॥ యతోవాఇమానిభూతానిజాయన్తేయేనజాతానిజీవన్తి।
యత్ప్రయన్త్యభిసంవిశన్తితద్విజిజ్ఞాసస్వతత్ బ్రహ్మేతి॥

(இ - ள்.) சகல சராசரப்பிரபஞ்சங்களும் எங்கே இருந்தண்டாயினவோ, எதனால் நிலைத்திருக்கின்றனவோ மறுபடியும் எதில் லயிக்கின்றனவோ, அஃதே பிர்ம்மம்;

என்று, வேதவாக்கியத்தினால்நிருபிக்கிறதே தடஸ்த லக்ஷணமெனப்படும். இதனால் ஆகாசாதிகளினுடைய சிருஷ்டி ஸ்திதி லயங்களுக்குக் காரணமாயும் சாக்ஷி மாத்திரமாயுமுள்ள ஒருவஸ்து உண்டென்கிற ஞானமுண்டாகும். அப்படிப்பட்ட ஞானமுண்டானாலும் பூதபௌதிகப் பிரபஞ்சங்களும் அகங்காராதி ஸ்தூல தேகம் வரைக்குமுள்ள தத்துவங்களும் காணப்பட்டுக் கொண்டிருக்கிறபடியால், இவைகளில் அப்பேர்க்கொத்த பிர்ம்மம் எதோவென்ற சந்தேகமுண்டாகுங்காலையில், இவைகளிலொன்றும் அப்படிப்பட்ட பிர்ம்மமில்லையென்று சந்தேகத்தைப் போக்கி, ஆத்மாவைப் பிரத்தியக்ஷமாய்த் தெரியச்செய்வதற்காக அதத்வ்யாவிருத்தி லக்ஷணமாவசியம். எப்படிஎனில்:—(తత్ = ஆத்ம, అతత్ = ஆத்ம அல்லாதது, என்றால் அநாத்மவஸ்துக்கள்.) அதத்துக்களென்று சொல்லப்படும் அநாத்ம வஸ்துக்களெல்லாவற்றையும், இது ஆத்மவல்ல, இது ஆத்மவல்ல, இது ஆத்மவல்லவென்றுநிஷேதித்து பிற்பாடு மௌனத்தையே கடைசியாகத்தெரியச்செய்யும் வேதவாக்கியமே அதத்வ்யாவிருத்தி லக்ஷணமெனப்படும். இதற்குத்

திருஷ்டாந்தம்.

தசரதமஹாராஜ சபையிலிருக்கும் அநேக இராஜாக்களில் இராமரென்ற பெயரையுடைய உன்னுடைய புருஷன் யாரென்று சீதாதேவியின் சகிகள் கேட்கவாரம்பித்து இவரா, இவரா, என்று ஒவ்வொரு இராஜாக்களினுடைய ரூபத்தை வர்ணித்துக்கேட்க இவரல்ல, இவரல்லவென்றுசொல்லிக்கொண்டு வருகையில் இராமருடைய வரிசைவந்து அவரை வர்ணித்துச் சொல்லிச் சகிகள்கேட்க சீதாதேவி மௌனத்தை யடைந்தனள். இம் மௌனமானது சகிகளுக் கெப்படி நிஜமான இராமரைத் தெரிவித்ததோ, அப்படி அதத்வ்யாவிருத்தி லக்ஷணமென்கிற நேதி நேதி (ந+இதி, ந+இதி) வாக்கியங்களினால் சகல சாதன சம்பன்னனும் மேதாவியாயும் ஆத்மாநுபவத்தை எவ்வளவு கஷ்டப்பட்டாகிலுந் தெரிந்துகொள்ளவேண்டுமென்கிற வைராக்கியத்துடன் கூடின விடா முயற்சியுடையவனுமிருக்கிற தீவிரதரமுமுக்ஷு, சத்குருமுகமாய் தத்துவமஸ்யாதி மஹாவாக்கிய விசாரணை செய்து ஜீவாத்ம பரமாத்மாவினுடைய ஏகீபாவஸ்திதியை ஸ்வாநுபவ நிஷ்டையாலடைவான்.

எப்படி எனில், தத்துவமஸி என்ற சுருதி வாக்கியத்தினால் (தத்=அந்த பிர்ம்மம், த்வம்=நீ, அஸி=ஆயிருக்கிறாய் என்றால், நீயே அந்த பிர்ம்மமாயிருக்கிறாய்) என்று அர்த்தஞ்சொல்லுவோமானால், வாக்கியார்த்த விசாரஞ்செய்யும்போது இராஜாவுக்கும் வேலைக்காரனுக்கும், மஹாமேருவுக்கும் அணுவிற்கும், சூரியனுக்கும் மினிமினிப் பூச்சிக்கும்போல், ஜீவேசு

ரர்க ளிருவர்களுக்கும் சர்வக்ஞத்வ கிஞ்சிக்ஞத்வாதி குணவைஷம்மியத்தினால் அதிக பேத மிருக்கிறபடி யால் ஐக்கியத்தைத் தெரிவிக்கும் லக்ஷியார்த்தத்தை நன்றாய் கவனிக்கவேண்டும்.

வாச்சியார்த்தமென்றால் அப்பிராதனார்த்தம்.

லக்ஷியார்த்தமென்றால் பிரதான அர்த்தம்.

லக்ஷணை மூன்றுவிதமாம்:—

1. ஜஹல்லக்ஷணை = விட்டலக்ஷணை,
2. அஜஹல்லக்ஷணை = விடாதலக்ஷணை,
3. ஜஹதஜஹர்லக்ஷணை = விட்டும்விடாதலக்ஷணை.

1. இருக்கிறதைவிட்டு மற்றொன்றை ஸ்வீகரிக்கிறது விட்டலக்ஷணை (ஜஹல்லக்ஷணை.)

திருஷ்டாந்தம்.

"𑌗𑌂𑌗𑌾𑌯𑌾𑌂 𑌘𑍋𑌷𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌵𑌸𑌤𑌿"

(இ - ள்.) கங்காப்பிரவாகத்தில் இடைச்சேரி யிருக்கிறதென்பது.

இதுவே வாச்சியார்த்தமெனப்படும். இந்த வாச்சியார்த்தத்தின் பிரகாரம் அர்த்தத்தைக் கிரகிப்போமானால், கங்கையின் பிரவாகத்தில் இடைச்சேரியிருக்கிறதென்பது பிரத்தியக்ஷ விரோதமாகையால், கங்காபதத்திற்கர்த்தமான பிரவாகத்தை விட்டுவிட்டு லக்ஷணையால் தீரத்தை யங்கீகரித்து கங்காதீரத்தில் இடைச்சேரி இருக்கிறதென்று சொல்லும் விஷயத்தில் ஒரு விரோதமுமில்லை. அப்படியே

" మనోబ్రహ్మేత్యుపాసీత ॥ "

என்கிற தைத்திரீய சுருதி வாக்கியத்திற்கு வாச்சியார்த்தமாவது:—

மனதே பிர்ம்மம் (ஆத்ம) என்கிற விஷயத்தில் சங்கல்பவிகல்ப விகாரங்களால் நிறைந்திருக்கிற மனதுக்குப் பிர்ம்ம (ஆத்ம) த்துவம் கூடாதாகையால், லக்ஷணையால் "மனோவிலக்ஷணம் பிர்ம்மா" வென்று சொன்னால் விரோத மொன்றுமில்லை. ஆகையால் ஜஹல்லக்ஷணை தத்துவமஸ்யாதி மஹா வாக்கியங்களுக் குபயோகமானதல்ல. ஏனெனில், இந்த ஜஹல் லக்ஷணையில் வாச்சியார்த்தமான எல்லா அம்சங்களையும் விட்டுவிடவேண்டியிருக்கிறது. எல்லா அம்சங்களையும் விட்டால் ஐக்கியம் சம்பவிக்கமாட்டாது. ஐக்கியத்தினாலேயே ஆனந்தாவாப்தி யுண்டாகவேண்டும். அதையன்றி வேறொருமார்க்கத்தினால் ஆனந்தாவாப்தியை யடைய முடியாது.

2. இருக்கிறதை விடாமல், பின்னும் கொஞ்சம் ஸ்வீகரிக்கிறது விடாதலக்ஷணை (அஜஹல்லக்ஷணை.)

திருஷ்டாந்தம்.

" శోణో ధావతి"

இதன் வாச்சியார்த்தமாவது:- "சிவப்போடுகிறது" என்றதாம். வாச்சியார்த்தத்தின்படி அசேதனமான சிவப்பு ஓடுகிறது முற்றிலும் விருத்தமாகையால், சிவப்பென்னும் வாக்கியத்தை விடாமல் ஒரு குதிரையைக்கூட லக்ஷணையா லங்கீகரித்து சிவப்பா

யிருக்கிற ஒரு ஜந்து ஓடுகிறதெனில் ஒருவிரோதமு மில்லை. அப்படியே,

శ్రు॥ సత్యంజ్ఞానమనన్తంబ్రహ్మ॥

என்கிற சுருதிவாக்கியத்திற்கு ஜடங்களான சத்தி யாதி தர்ம்மங்களுக்கு பிர்ம்மத்துவம் அசம்பவமாகை யால் சத்தியாதிதர்ம்மங்களுடன் கூடின பிர்ம்மத்தை லக்ஷியார்த்தத்தால் அங்கீகரிக்கும் விஷயத்தில் யா தொரு விரோதமுமில்லை. இந்த அஜஹல்லக்ஷணை யும் " தத்துவமஸ்யாதி " மஹா வாக்கியங்களுக் குபயோகமாகாது. எப்படியெனில், இந்த லக்ஷி யார்த்தத்தில் விசேஷண விசேஷ்யாம்சங்களை விட வில்லை. விரோதமாயுள்ள விசேஷண விசேஷ்யாம் சங்களை விட்டாலல்லது ஐக்கியங்கூடாது.

3. இருக்கிறதில் விருத்தாம்சங்களைத் தள்ளி அவிருத்தாம்சங்களைக்கொண்டு ஐக்கியத்தைச் சொல் லுகிறது விட்டும்விடாதலக்ஷணை (ஜஹதஜஹல்லக்ஷணை.)

திருஷ்டாந்தம்.

" సోఽయం దేవదత్తః "

இதன் வாச்சியார்த்தமாவது ;— காசிப்பட்டணத் தில் சந்தித்த தேவதத்தனே இந்த தேவதத்தனென் கிறது. அத்தேசம், அக்காலம், அவ்வர்ணம், அவ்வவ ஸ்தைமுதலானவைகளுக்கும், இத்தேசம், இக்கா[illegible] இவ்வர்ணம், இவ்வவஸ்தை முதலானவைகளுக்[illegible] பேத மிருக்கிறபடியால் வாச்சியார்த்தத்தின்பட[illegible] ஐக்கியம் அசம்பவம். லக்ஷியார்த்தத்தால் ஐக்[illegible]

சம்பவம். எப்படியெனில், வாச்சியார்த்தத்தில் ஏக தேச அம்சங்களான அத்தேசம், அக்காலம் முதலான வைகளையும் இத்தேசம், இக்காலம் முதலானவைகளை யும் விட்டுவிட்டு வாச்சியார்த்தத்தில் முக்கியாம்சமா ன சரீரபிண்டத்தைமாத்திரம் கிரகித்து அந்தத்தேவத த்தனே இந்தத்தேவதத்தன்என்று அங்கீகரிக்கும்விஷயத் தில்யாதொருவிரோதமுமில்லை. அப்படியே, "தத் வமஸி" என்றமஹாவாக்கியத்திலிருக்கிற "தத்" பதத் திற்கும் "துவம்" பதத்திற்கும் வாக்கியார்த்தத்தை விசாரணைசெய்து அதிலே விட்டுவிடத்தகுந்த விருத் தாம்சங்களை விட்டு அவிருத்தமான முக்கியாம்சத்தை லக்ஷணையால் அங்கீகரித்து ஐக்கியத்தைத் தெரிந்து கொள்ளவும்.

எப்படியெனில், அவித்தியோபாதிகனும் கர்த்ரு த்துவ போக்த்ருவத்துவாதி அபிமானியாயும் கிஞ் சிக்ஞனுமிருக்கிற நீ, மாயோபாதிகராயும் அகர்த்து ருத்துவ அபோக்த்ருத்துவராயும், ஸர்வஞ்ஞத்துவ ஸர்வேசுவரத்துவ ஸர்வாந்தர்யாமித்துவாதி அனந்த கல்யாணகுணபரிபூர்ணராயுமிருக்கிற ஈசுவரனென் பது வாச்சியார்த்தம், "துவம்" பதவாச்சியார்த்தமான ஜீவனுக்கும் "தத்" பதவாச்சியார்த்தமான ஈச்சுரனு க்கும் கிஞ்சிஞ்ஞத்துவ சர்வஞ்ஞத்துவாதி குணதார தம்மியத்தினுல் மிகுந்த வித்தியாசமிருக்கிறபடியால் வாச்சியார்த்தத்தில் விருத்தங்களாயும் ஏகதேச அம் சங்களாயு மிருக்கிற அவித்தையையும் அவித்தியா காரியங்களான கிஞ்சிஞ்ஞத்துவாதி குணங்களையும், மாயையும் மாயாகாரியங்களான சர்வஞ்ஞத்து வாதி

குணங்களேயும் விட்டுவிட்டு, வாச்சியார்த்தத்தில் முக்கியாம்சமும் அவிருத்தாம்சமுமான அவித்தியாதிஷ்டான கூடஸ்தசைதந்யமே, மாயாதிஷ்டான சைதந்யமான பிர்ம்மம் (ஆத்ம, பகவான்) என்று லக்ஷணேயால் அங்கீகரித்து, நீ அதுவாயிருக்கிறய் என்று சொல்லும் விஷயத்தில் ஒருவிரோதமுமிருக்காது. இந்த ஜஹதஜஹல்லக்ஷணேயே "தத்துவமஸி" என்கிற மஹாவாக்கியத்திற் குபயோகமாம். தத்துவமஸ்யாதி மஹாவாக்கியங்களே இந்த ஜஹதஜஹல்லக்ஷணேயால் (விட்டும்விடாதலக்ஷணே, பாகத்தியாகலக்ஷணேயால்) சத்குருபதேசபூர்வகமாக விசாரணேசெய்து தெரிந்துகொண்டு அநுஷ்டிக்கிறதின் மூலமாய் ஜீவபர ஐக்கிய சித்தியுண்டாகும். ஜநநமரண பிரவாக ரூபமான சம்சார நிவர்த்திக்கு இதுவே முக்கியசாதனம். (உபாயம்.) வேதாந்த கிரந்தங்களேப் படித்ததினுலும் பிறருக்குச் சொல்வதினுலும் அல்லது வேதாந்தப்ரவசனங்களேக் கேட்டதினுலும் (துவேஷத்தையும் வைஷம்யத்தையுண்டுபண்ணக் கூடிய) உபதேசங்களே யடைந்ததினுலும், ஓர் மதத்தை விட்டு மற்ருெருமதத்தில் பிரவேசித்ததினுலும் தான்ஞானியாய் விட்டதாய் எண்ணிக்கொண்டு, காமக்குரோதாதி துர்க்குணங்களின் நிவர்த்தியை பாஹிய ஆந்தரேந்திரிய மனேநிக்கிரகங்களாலடைந்து, சித்தசுத்தியைப்பெற்று சத்குருபதேசமூலமாய் ஸ்வாநுபவத்தை யடையாத அவிவேகிகளுக்கு அதிகதூரத்திலிருக்கிறதாயும்,

శ్లో॥ కాశీక్షేత్రంశరీరం త్రిభువనజననీ
వ్యాపినీ జ్ఞానగంగా।
శ్రద్ధాభక్తిర్గయేయం నిజగురుచరణ
ధ్యానయోగప్రయాగః।
విశ్వేశోయం తురీయం సకలజనమన
స్సాక్షీభూతోంతరాత్మా। * * * ॥

என்கிற பிரகாரம் அந்தர்யாமியாய் சகலத்திலும் நிறைந்திருக்கிற ஆத்மாவே தன்னிலும் அந்தர்யாமியாயிருக்கிறுரென்று சுவாநுபவத்தால் தெரிந்துகொண்ட மஹாத்மாக்களுக்கு (ஞானிகளுக்கு) அதிசமீபத்திலும், (தன்னிலும்) ஆத்மா எல்லாவற்றிலும் உள்ளும் புறம்பும் மேலுங்கீழும் மத்தியிலும் பக்கங்களிலும் சர்வபரிபூர்ணமாயிருக்கிறதென்று சுவாநுபவத்தால் தெரிந்துகொண்டவன்,

శ్లో॥ యత్సౌఖ్యాంబుధి లేశలేశత యిమే
శక్రాదయో నిర్వృతాః।
యచ్చిత్తే నితరాం ప్రశాంతకలనే
లబ్ధ్వా మునిర్నిర్వృతః।
యస్మిన్నిత్య సుఖాంబుధౌ గళితధీ
ర్బ్రహ్మైవ నబ్రహ్మవిత్।
యఃకశ్చిత్ససురేంద్రవందితపదో
నూనం మనీషామమ॥

(இ-ள்.) தேவேந்திரன் முதலானபேர்களா லநுபவிக்கப்படும் ஆனந்தமானது, இந்த பிர்ம்மானந்தத்தினுடைய லேசலேசமென்று சத்விசாரணையாலறிந்து சங்கல்பநாசத்தைப்

பெற்று சாந்தியை யடைந்திருக்கும் மஹான்களாகிய, அந்த நித்தியமாயுள்ள பிர்ம்மாநந்தத்தில் இடைவிடாமல் அமிழ்ந்திருப்பவர்களான பிர்ம்மவித்துக்கள், பிர்ம்மமே யென்று இந்த மந்திரமுபதேசிக்கிறது.

---

## ஆருவதுமந்திரம்.

### அவதாரிகை.

ஐந்தாவதுமந்திரத்தில் சொல்லப்பட்ட ஆத்மஸ்வரூபஞாநானுபவ பலமான ஜீவன்முக்திலக்ஷண விவரமானது வரப்போகிற இரண்டு மந்திரங்களினால் சொல்லப்படுகிறது.

6.

శ్రు॥ యస్తు సర్వాణి భూతా న్యాత్మ న్యే వానుపశ్యతి।
సర్వభూ తేషు చాత్మానం తతో నవిజుగుప్స తే॥౬॥

சுருதி ॥ யஸ்துஸர்வாணிபூதா ந்யாத்மந்யேவா நுபச்யதி ।
ஸர்வபூதேஷுசாத்மாநம் ததோநவிஜுகுப்ஸதே॥சு॥

యః, తు
யஃ, து
(ஜகத்திருஷ்டியற்ற பரிவிராட்டும் முமுக்ஷுவுமான) எந்தஞானி ("து" சப்பதமானது ஜகத்திருஷ்டி நிவாரணத்தைத் தெரிவிக்கும்பொருட்டு உபயோகிக்கப்பட்டிருக்கிற தென்றறியவும்)

సర్వాణి, భూతాని
ஸர்வாணி, பூதாநி
(அவியக்தம் முதற்கொண்டு ஸ்தாவராந்தம் வரைக்குமுள்ள சேதனாசேதனங்களான) சகல பூதங்களையும்

| | |
|---|---|
| ఆత్మన్యేవ<br>ஆத்மந்யேவ | தன்னிடத்திலேயே (ஆத்மாவைக்காட்டிலும் வேறில்லையென்று, என்ருல் தன்னிடத்திலேயே சகல பூதங்களுமிருக்கிறது, தன்னைக் காட்டிலும் வேருன வஸ்து இல்லவே இல்லை என்றும். ఏవ; சப்தம் ஜீவேசுவரர்களுடைய அபேதத்தைத் தெரியச்செய்யும்பொருட்டு உபயோகிக்கப்பட்டிருக்கிறதாய்த் தெரிந்துகொள்ளவும்) |
| సర్వ<br>ஸர்வ | சகலமான |
| భూతేషు, చ<br>பூதேஷு,ச | பூதங்களிலும் |
| ఆత్మానమ్<br>ஆத்மாநம் | ஆத்மாவை (சகலத்திலுமிருக்கிறவன், தானே, என்றும்) |
| అనుపశ్యతి<br>அநுபச்யதி | பார்க்கிருனே (சுவாநுபவத்தாலறிகிருனே) |
| సః<br>ஸஃ | (அவன்) |
| తతః<br>ததஃ | அந்தக் (பிரகாரம் சுவாநுபவத்தால் தெரிந்துகொண்ட) காரணத்தைப் பற்றி |
| నవిజుగుప్సతే<br>நவிஜுகுப்ஸதே | (எதிலும்) ஜுகுப்ஸயை யடையான் ஸ்துதி நிந்தாசூன்யனுயிருப்பான். |

శ్రు॥ సర్వభూతస్థమాత్మానం సర్వభూతానిచాఽత్మని।
సంపశ్యన్బ్రహ్మ పరమం యాతినాన్యేన హేతునా॥

(కైవల్యోపనిషత్.)

(இ-ள்.) சகலமும் ஆத்மஸ்ரூபமேயென்கிற அநுபவஞான முடையவன் சாயுஜ்யத்தை யடைவனேயல்லது, மற்றெந் தச் சாதனத்தினுலும் சாயுஜ்யத்தை யடையமுடியாது என் று கைவல்யோபநிஷத்தில் சொல்லியிருக்கிறபடியாலும்,

శ్లో॥ సర్వభూతస్థమాత్మానం సర్వభూతాని చాత్మని।
ఈక్షతే యోగయుక్తాత్మా సర్వత్రసమదర్శనః॥

భగవద్గీతా. VI. 28.

(இ - ள்.) சகல சம்சார நிவர்த்திக்கு முக்கிய காரணமா னதும் தியானயோகத்திற்கு பலமானதுமான சகலமும் பக வத்ஸ்வரூபமென்ற நிரந்தராநுபவத்தின் கிரமத்தைச் சொ ல்லுகிறேன் அர்ஜுனு! கேள் என்று கிருஷ்ணமூர்த்தி சொல் லுகிறதாவது:—பிரம்மம் முதற்கொண்டு ஸ்தாவர ஜங்கமங் கள் வரைக்குமுள்ள அநேகவிதங்களான பதார்த்தங்களெல் லாவற்றிலும் பிர்ம்மத்துவ பாவனையுடைய தியானயோகி, தானே சகல பூதரூபங்களாய்க் காணுகிறதாயும் தன்னிடத்தி லேயே பிர்ம்மாதி ஸ்தம்பபர்யந்தமுள்ள சகலமு மிருப்பதா யும் ஸ்வாநுபவத்தால் தெரிந்துகொள்ளுவா னென்றும்,

శ్లో॥ యోమాంపశ్యతిసర్వత్ర సర్వంచమయిపశ్యతి।
తస్యాహం నప్రణశ్యామి సచమే నప్రణశ్యతి॥

భగవద్గీతా. VI. 30.

(இ - ள்.) ஆத்மைக்கியாநுபவத்தினுடைய பலத்தைச் சொல்லுகிறேன் கேள் அர்ஜுனு! எவன் சகல வஸ்துக்களில்

என்னையும், சகல வஸ்துக்களையும் என்னிலும் பார்க்கிருனே அவனுக்கு நான் காணமற்போகிறதில்லை என்ருல், அவனே நான், நானேயவன் என்பதாம். தான் தனக்குக் காணமற் போவது உலகத்திலில்லையல்லவா என்று பகவத்கீதை 6-வது அத்தியாயம், 30-வது சுலோகத்திலுஞ் சொல்லுகிறபடி யாலும்,

இவ்விடத்திலும் (இந்த மந்திரத்திலும்) எந்த ஞானி, ஜலத்தில் அலைமுதலானவைகளைப்போல, தன்னிடத்தில் சகலபூதங்களையும், அலைமுதலானவைகளி லுள்ள ஜலத்தைப்போல, சகல பூதங்களிலும் தன்னையும் பார்க்கிருனே,

శ్రు॥ యదైతమనుపశ్యత్యాత్మానం దేవమఞ్జసా।
ఈశానంభూతభవ్యస్య నతదావిచికిత్సతి॥

என்ற பிரஹதாரண்ய சுருதிப்பிரகாரம், தயையுண் டாயிருக்கவேண்டிய அவசியமில்லை என்ருல், ஸ்துதி நிந்தாசூன்யனுயிருப்பான். அப்படிப்பட்ட ஞானிக் கு தன்னைக்காட்டிலும் வேருென்றிருந்தா லல்லவா அப்படிப்பட்ட பதார்த்தத்தில் தயை அல்லது நிந்தை முதலானவைகளிருக்கவேண்டும். ஆகையால் ஜலத் திற்கும், அலைகள் குமிழிகள் முதலானவைகளுக்கும் எப்படி யபேதமோ (ஐக்கியமோ), அப்படி பிர்ம்மத் திற்கும் (ஆத்மாவுக்கும்) ஜீவன் முதலாயுள்ள சகலப் பிரபஞ்சத்திற்கும் ஐக்கியத்தை ஜீவன் முக்தன் (ஞானி) ஸ்வாநுபவத்தால் அறிவன் (அடைந்திருப் பான்) என்று இந்த ஆருவது மந்திர முபதேசிக் கின்றது.

---

## ஏழாவது மந்திரம்.

### அவதாரிகை.

ஆருவதுமந்திரத்திரத்திற் சொல்லப்பட்ட ஆத்மா நுபவத்தையுடைய ஜீவன்முக்தனுடைய ஸ்திதியை (இருப்பை) இம்மந்திரத்தாலும் விவரிக்கப் படுகிறது.

7.

శ్రు॥ యస్మిన్సర్వాణిభూతాన్యాత్మైవాభూద్విజానతః।
తత్రకోమోహఃకశ్శోకఃఏకత్వమనుపశ్యతః॥౭॥

சுருதி ॥ யஸ்மின்ஸர்வாணிபூதா
ந்யாத்மைவாபூத்விஜாநதஃ ।
தத்ரகோமோஹஃகச்சோகஃ
ஏகத்வமநுபச்யதஃ ॥எ ॥

యస్మిన్ (யஸ்மின்) — எந்த பிரம்மாநுஷ்டாநுபவ காலத்தில் (தியானசமாதி அநுபவகாலத்தில்)

సర్వాణి,భూతాని (ஸர்வாணி, பூதாநி) — (சேதநசேதனங்களாயுள்ள) சகல பூதங்களும் ஆத்மஸ்வரூபமாகவேயிருக்கிறதோ,

ఆత్మైవ, అభూత్ (ஆத்மைவ, அபூத்) — ஆத்மாவைத்தவிர வேறே இல்லை என்று

విజానతః (விஜாநதஃ) — தெரிந்துகொண்டவனுக்கு (ஸ்வாநுபவத்திலிருப்பவனுக்கு)

ఏకత్వమ్ (ஏகத்வம்) — இரண்டற்றிருக்கிறதை (அவித்யாஸ்வரூபங்களான ராகத்துவேஷாதி துர்க்குணங்களை சத்ஸங்காநுஷ்டா

ணத்தினுல் விலக்கி, குருபதேசத்தைப்பெற்று தததுஷ்டானத்தினுல் ஐக்கியாநுபவத்தை)

𑌅𑌨𑍁𑌪𑌶𑍍𑌯𑌤𑌃
அநுபச்யதः — பார்க்கிறவனுக்கு(ஸ்வாநுபத்தினுல் நிரதிசயானந்தத்திலிருப்பவனுக்கு)

𑌤𑌤𑍍𑌰
தத்ர — அப்படிப்பட்ட ஆனந்தரூபஸ்திதியான நிரங்குசத் திருப்திகாலத்தில்

𑌮𑍋𑌹𑌃
மோஹः — (ஆவரணசக்திகாரியமான) மோகமானது

𑌕𑌃
கः — எது ?

𑌶𑍋𑌕𑌃
சோகः — (விக்ஷேப சக்திகாரியமான) துக்கமானது

𑌕𑌃
கः — எது ?

## தாத்பரியம்.

அவித்தையினுல் ஜீவர்களுக்கு சப்த (ஏழு) அவஸ்தைகளுண்டாகின்றன. அவைகளெவை எனில்,

1. அஞ்ஞானம்.
2. ஆவரணம்.
3. விக்ஷேபம்.
4. பரோக்ஷஞானம்.
5. அபரோக்ஷஞானம்.
6. துக்கநிவர்த்தி.
7. நிரங்குசத்திருப்தி.

இவைகளின் விவரமாவது:—

1. சிதாபாஸனுன ஜீவன் தத்துவ விசாரணைசெய்வதற்குமுன் சம்சார சாகரத்தில் மூழ்கி பகவத் (பிர

ம்ம) ஸ்வரூபமான ஆத்மாவை ஸ்மரிக்காமல் மறந் திருக்கும் ஸ்திதியே, அக்ஞானம்.

2. பிரம்மமென்ப தில்லவேயில்லை அப்படியொரு வஸ்துவிருந்தால் எல்லோருக்கும் காணப்படாதா? என்பதே, ஆவரணம்.

3. நான் மனிதன் இச்சென்மத்தில் இன்னின்ன வைகளைச் செய்தால் இன்னின்ன பலன் கிடைக்கும் என்று கர்த்திருத்துவ போக்த்திருத்துவாதிகளை யுடைத்தாயிருக்கிறதே, விக்ஷேபம்.

4. குருவினு லுபதேசிக்கப்பட்ட "சத்தியம் ஞானமனன்தம்பிர்ம்ம" என்ற சுருதிவாக்கியத்தால் பிர்ம்மமென்ெருரு வஸ்து உண்டென்று தெரிந்துகொள்வதே, பரோக்ஷஞானம்.

5. தத்துவமஸி என்கிற மஹாவாக்கியத்தை யனுசரித்து பிர்ம்ம விசாரணைசெய்து சகல சந்தேகங்களையும் போக்கடித்துக்கொண்டு ஸ்வாநுபவத்தை யடைந்து நிஷ்டையிலிருப்பதே, அபரோக்ஷஞானம்.

6. நிஜமான சமாதியநுபவத்தை யுடைத்தானவனுக்குக் கர்த்திருத்துவம் போக்த்திருத்துவமற்றுப் போகுமாகையால் அதுவே, துக்கநிவர்த்தி.

7. இத்துக்கநிவர்த்தியால் நாம் இனிச்செய்யவேண்டுவதொன்றுமில்லை என்ற சங்கல்ப விகல்பங்களற்றிருப்பதே, நிரந்தரதிருப்தி.

ஜீவத்துவத்தை யடைந்திருக்கும் பிரதி புருஷனுக்கும் அக்ஞானம், ஆவரணம், விக்ஷேபம் இம்மூன்

றும் ஸ்வதசித்தமாயும், பிரயத்தனத்தால் ஸத்ஸங்கத்தை யடைந்து சித்த சுத்தியைப்பெற்று குருபதேசத்தினல் பரோக்ஷஞானமும், அநுஷ்டானத்தினல் அபரோக்ஷஞானம் முதலான மூன்றும், ஆக இவ்வேழும் உண்டாகும்.

திருஷ்டாந்தம்.

பத்துமனிதர்கள் ஒரு ஆற்றைக்கடந்து அக்கரைசேர்ந்தபின் எல்லோரும் க்ஷேமமாய் கரையேறினேமா வென்றுகணக்கிடுகையில் ஒவ்வோர் தடவையிலும் தன்னைவிட்டுவிட்டு கணக்கெண்ணி, தன்னை மறந்து சேர்ந்துவந்த பத்துமனிதர்களில் ஒருவன் குறைவதாய் நினைத்து பிரமையையடைகிறுன். இதில் ஒன்பது பேர்களைப் பார்த்துக் கணக்கிட்ட தான்-பத்தாவது மனிதனு யிருந்தபோதிலும் பிராந்தியினலே ஒன்பது பேர்களைக் கணக்கிட்டதன்னைதசமனுக (பத்தாவது மனிதனுக) த்தெரிந்துகொள்ளாமை யென்ற அவிவேகமே, அஞ்ஞான மெனப்படும். தசமனைதான், தசமன் இல்லை இருந்தாலகப்படானு? என்பதே, ஆவரணம். ஆற்றிலேதசமன் மறித்தானென்று துக்கத்தை யடைந்து அழுகிறதே, விக்ஷேபம். தசமன் மறிக்கவில்லை இருக்கிறுன் என்கிற ஆப்தன் வாக்கியத்தைக் கேட்டு அந்தக்கரணத்தில் நிச்சயமாய் நம்புகிறதே அஸத்தாவரண நிவர்த்தகமான, பரோக்ஷஞானம். ஒன்பது பேர்களைக் கணக்கிட்ட நீயே தசமன் என்று ஆப்தன் சொன்னதைக்கிரகித்துஆ! ஆ! இப்போ நான் தசமன் என்று தன்னைத்தான் தெரிந்து கொள்வதே அஹானவரண நிவர்த்தகமான, அபரோக்ஷஞானம். தச

மனுகியதன்னைத் தான் தெரிந்துகொண்டபின்பு தச மன் ஆற்றிலிறந்தானென்கிற துக்கம்வராமலிருப்பதே, துக்க நிவர்த்தி. தசமன் ஆற்றில்போய்விட்டானே இனி அவன் தாய்தந்தை பெண்டு பிள்ளைகளுக்கு என்ன சொல்லுவோ மென்கிற இம்முதலான சங்கல்பங்கள ற்றுப்போகிறதே, நிரங்குசத்திருப்தி. ஆகையால் தன் னுல் கணக்கிடப்பட்ட ஒன்பது பேர்களைக்காட்டிலும் வேருயிருக்கிற தான் தசமனென்று தெரிந்துகொள் ளாத அவிவேகத்தினுல் தன்னைத்தான்மறந்து பிரமிக் கும் தசமனைப்போல தொண்ணூற்ருறு தத்துவங்க ளிலேயுஞ் சேராத தன்னை தொண்ணூற்றேழாவதாய் விபஜித்து தெரியவொட்டாமற் செய்யும் அவித்தை யினுல் தன்னைமறந்தவனைப்போல பிராந்தியை யடை கிருன். பிற்பாடு

శ్లో॥ మాయావశేనసుప్తో మధ్యేపశ్యన్ సహస్రశస్స్వప్నాన్।
దేశికవచప్రబుద్ధో దీవ్యత్యానన్దవారిధౌకోపి॥

(ఆత్మవిద్యావిలాసం).

என்கிறப்பிரகாரம் சத்குருவினுபதேசத்தை யடை ந்துத்ததநுஷ்டானஸ்வாநுபவத்தினுல் பிராந்தி நிவார ணத்தை யடைகிருன். அவித்தியா நிவர்த்தியே விவே கம் (ஞானம்) ஆனபடியால் அந்த ஞானமும் அவித் தியாகாரியமே யல்லாமல் வேறல்ல. ஆகையால் இப் படிப்பட்ட அநுபவசாலிகளான பெரியோர்களை யடைந்து அவர்களின்மூலமாய் வேதாந்தச்சிரவணஞ் செய்து ராகத்துவேஷ காமக்குரோத, அகங்கார மம காரங்கள் முதலிய துர்க்குணங்களான துவந்தங்களை

விட்டு (நிவர்த்தித்துக்கொண்டு) சிரவணஞ் செய்து, பிற்பாடு மனனஞ்செய்து, அதனுல் சித்தசுத்தியை யடைந்து, சத்குருவினுலுபதேசிக்கப்பட்டு ததநுஷ்டானஞ்செய்து ஸ்வாநுபவகாலத்தில் சேதனுசேதனங்களான சகலமும் ஆத்மா (தன்) ஸ்வரூபமேயென்று நிரதிசயானந்த சுகத்திலிருப்பவனுக்கு (ஜீவன்முக்தனுக்கு) ஆவரணசக்தி காரியமான மோகமும், விக்ஷேபசக்தி காரியமான துக்கமும் ஏது? அப்படிப்பட்ட ஜீவன்முக்தனுக்கு சோகமோகாதிகள் பாதிக்கமாட்டாதென்று) இந்த மந்திரம் உபதேசிக்கிறது. இதற்குச் சுருதிப்பிரமாணம்:—

శ్రు॥ భిద్యతేహృదయగ్రన్థిః భిద్యన్తేసర్వసంశయాః।
క్షీయన్తేచాస్యకర్మాణితస్మిన్దృష్టేపరావరే॥

(இ - ள்.) சத்குருபதேசத்தையடைந்து ததநுஷ்டானத்தினுல் ஸ்வாநுபவத்தையடைந்தவனுக்கு ராகத்துவேஷாதிகளான துர்க்குண துவந்தங்கள் விட்டுப்போகும்; சகல சந்தேகங்களும் சேதிக்கப்படும்; சகல கர்மங்களும் நசித்துப் போகும்

என்ற சுருதி வாக்கியமும்,

శ్లో॥ సర్వభూతస్థితంయోమాం భజత్యేకత్వమాస్థితః।
సర్వథావర్తమానోపి సయోగీమయివర్తతే॥

భగవద్గీతా. VI. 31.

(இ - ள்.) சகலமும் பகவத் (ஆத்மா) ஸ்வரூபமே யென்ற அபேத (ஐக்ய) ஞானத்தோடு, நானே யவன், அவனே நான், என்கிற தியான நிஷ்டையிலுள்ளவன் நிஷ்டையிலிருக்கும்

பொழுதும் இல்லாதபொழுதும் என்னிடத்தில் ஐக்கியத்தையடைந்தேயிருப்பான்.

శ్లో॥. యస్త్వాత్మరతిరేవస్యా దాత్మతృప్తశ్చమానవః।
ఆత్మన్యేవచసన్తుష్ట స్తస్యకార్యంనవిద్యతే॥
భగవద్గీతా. III. 17.

(இ - ள்.) சத்குருபதேசத்தினால் ஆத்மஸ்வரூபத்தை தெரிந்துகொண்டு ஈஷணத்திரயங்களையும் விட்டவர்களாகி சரீரதாரணநிமித்தமாகமாத்திரம் பிக்ஷாடனஞ் செய்துகொண்டிருப்பவர்களுக்கு எப்போதும் ஆத்மாநுபவத்தைத்தவிர செய்யவேண்டியது வேறொன்றுமில்லை,

என்று சொல்லப்பட்டிருக்கிறபடியால் இவைகளே ப்பிரமாணங்களாம்,

## தத்துவங்கள்

### தொண்ணூற்றாறின் விபரம்.

| | |
|---|---|
| பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம். என பூதங்கள் ... ... ... ... | 5 |
| வாக்கு, பாணி, பாதம், பாயு, உபஸ்தம். என கர்மேந்திரியங்கள் ... ... ... | 5 |
| வசனம், தானம், கமனம், விசர்ஜனம், ஆநந்தம். என கர்மேந்திரிய விஷயங்கள் ... ... | 5 |
| துவக்கு, சக்ஷுஸ், ஸுரோத்திரம், ஜிஹ்வை, ஆக்கிராணம். என ஞானேந்திரியங்கள் ... ... | 5 |
| சப்த, ஸ்பர்ச, ரூப, ரச, கந்தம். என தன்மாத்திரைகள் ... ... ... ... | 5 |
| மனம், புத்தி, சித்தம், அகங்காரம், உள்ளம். என அந்தக்கரணம் ... ... ... | 5 |

| | | |
|---|---|---|
| இடை. | = வலதுகால் பெருவிரலிலிருந்து இடது நாசிவரைக்கு மிருப்பது. | நாடிகள் = 10 |
| பிங்கலை | = இடதுகால் பெருவிரலிலிருந்து வலது நாசிவரைக்கு மிருப்பது. | |
| சுழும்நா | = எல்லாநாடிகளுக்கும் ஆதாரமாய் மூலாதாரத்திலிருந்து நடு நாடியாய் சிரசுவரைக்கு மிருப்பது. | |
| கண்டம் | = தண்ணீர்சோறு முதலானவைகளை உண்ணுக்கினுல் விழுங்கச் செய்வது. | |
| அருஷிகள் | = வலது கண்ணிலிருப்பது. | |
| காந்தாரி | = இடதுகண்ணிலிருப்பது. | |
| அத்தி | = வலதுகாதிலிருப்பது. | |
| அலம்புடை | = இடதுகாதிலிருப்பது. | |
| சங்கினி | = உபஸ்தத்திலிருப்பது. | |
| குகு | = அபானத்திலிருப்பது. | |

பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன். என வாயுக்கள் ... ... 5

நாகன், கூர்மன், க்ரகரன், தேவதத்தன், தநஞ்சயன். என உபவாயுக்கள் ... ... ... 5

அமராச்ரயம், விபஜனுச்ரயம், ஜலாச்ரயம், மலாச்ரயம், சுக்கிலாச்ரயம். என ஆச்சிரயங்கள். ... 5

அன்னமயம், பிராணமயம், மனோமயம், விக்ஞானமயம், ஆநந்தமயம். என கோசங்கள் ... 5

மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தம், ஆக்நேயம். என ஆதாரங்கள் ... 6

வாத, பித்த, சிலேஷ்மம். என தோஷங்கள் .. 3

---

## எட்டாவதுமந்திரம்.

### அவதாரிகை.

மேற்சொன்ன மந்திரங்களில் சொல்லப்பட்ட ஆத் மஸ்வரூபத்தைத் தெரிந்துகொள்ளாமையே ஜீவ த்துவமென்றும், ஸ்வாநுபவமே ஆத்மத்துவ மென் றும், அப்படிப்பட்ட ஸ்வஸ்வரூபமான ஆத்மஸ்வரூப விவரத்தை இந்த மந்திரம் உபதேசிக்கிறது.

8.

శ్రు॥ సపర్యగాచ్ఛుక్రమకాయమవ్రణ
మస్నావిరగ్ం శుద్ధమపాపవిద్ధమ్।
కవిర్మనీషీపరిభూస్స్వయమ్భూర్యాథా
తథ్యతోఽర్థాన్వ్యదధాచ్ఛాశ్వతీభ్యస్సమాభ్యః॥

சுருதி ॥ சபர்யகா ச்சுக்ரமகாயமவ்ரண
மஸ்னுவிரீகும் சுத்தமபாபவித்தம் ।
கவிர்மநீஷீபரிபூஸ்வயம்பூர்யாதாதத்யதோர்
தான்வ்யததாச்சாசுவதீப்யஸ்ஸமாப்யஹ ॥ அ॥

ശുക്രം
சுக்ரம் — ஸ்வயம்ஜோதிஸ்வரூபனும்,

അകായം
அகாயம் — சூக்ஷ்மசரீரமற்றவனும்,

അവ്രണം
அவ்ரணம் — காயமற்றவனும்
അസ്നാവിരം
அஸ்நாவிரம் — நரம்புகளற்றவனும் } எனில், ஸ்தூல சரீர மற்றவனும்,

ശുദ്ധം
சுத்தம் — (ஸ்தூலசூக்ஷ்ம சரீரங்களுக்குக் காரணமான அவித்தியா) மலமற்றவனும், (என்றால் காரணசரீர மற்றவனும்)

അപാപവിദ്ധം
அபாபவித்தம் — தர்மாதர்மங்களான பாபங்களற்றவனும் (அதர்ம்மத்தை பாபமென்று சொல்லக்கூடுமே யலலாது தர்மத்தையும் பாபமென்று சொல்லலாமா? என்றால், பாபமானதெப்படி துக்காநுபவ சாதனங்களான ஜென்மங்களுக்கு ஹேதுவாகுமோ, அப்படியே தர்மமும் சுகாநுபவ ஜன்மங்களுக்குக் காரணமாகும். ஆகையால் ஜனனமரண சம்சாரத்திலிருந்து விடுபவடுவதற்கு விரும்புவோன்,

ஶ்லோ॥ త్యజధర్మ, మధర్మంచ
ఉభేసత్యానృతేత్యజ,
என்றபிரகாரம் (ஜீவன் முக்தன்)
இரண்டையும் த்யஜிக்கவேண்டும்

కవిః
கவிஃ
திரிகால (மூன்றுகால) சங்கதிகளையுந் தெரிந்தவனும், இரண்டற்றிருப்பவனும்)

మనీషీ
மனீஷீ
சர்வஞத் துவாதிகளையுடைய ஈச்சுரனும்

పరిభూః
பரிபூஃ
அதிச்சிரேஷ்டனும் (எல்லாவற்றைக் காட்டிலும் சிரேஷ்டனும்)

స్వయమ్భూః
ஸ்வயம்பூஃ
(ஆகையினலேயே) தானகவே யிருப்பவனுமான) சகலமும் பிறக்கிறதற்குக் காரணங்களுண்டு, ஆத்மா பிறப்பற்றவனுகையால் அவன் பிறப்பதற்குக் காரணுந்தரம் கிடையாது. ஆகையால் சுயம்பு எனப்படும்)

సః
ஸஃ
(முன்சொல்லப்பட்ட) இந்த ஆத்மா

పర్యగాత్
பர்யகாத்
ஆகாயத்தைப்போல் சர்வவியாபி யாயிருக்கிருன்

శాశ్వతీభ్యః
சாஸ்வதிப்யஃ
(பிரவாகரூப) நித்தியங்களாயுள்ள (என்ருல், ஆற்றங்கரையில் நின்றுகொண்டு வெள்ளத்தைப்பார்க்கிறவனுக்குத் தனக்கெதிரில் தான்பார்த்துக் கொண்டிருக்கிற ஜலம்நிற்காமல் பிரவாகித்துக் கொண்டிருந்த போதி

லும், தான்பார்த்துக்கொண்டிருந்த ஸ்தலத்தில் இடைவிடாமல் நவநவமாக தண்ணீர்மாத்திரம் போய்க்கொண்டே யிருக்குமாப்போல, இன்றையதினம் பார்த்தசரீரம் நாளையதின மில்லாமற்போனபோதிலும்

శ్లో॥ వాసాంసిజీర్ణానియథా విహాయ
నవానిగృహ్ణాతి నరోఽపరాణి।
తథాశరీరాణి విహాయజీర్ణా
న్యన్యానిసంయాతి నవానిదేహీ॥

భగవద్గీతా. II. 22.

சொல்லப்பட்டிருக்கிற பிரகாரம் நவநவமாக ஜீவர்கள் இடைவிடாமலிருக்கிறபடியால் பிரவாகரூப நித்தியத்துவம் சொல்லப்பட்டது)

సమాభ్యః ஸமாப்யஃ — சம்வத்ஸர (வருஷ) ங்க ளென்று பேருடைய பிரஜாபதியின் (ஸமஷ்டி ஜீவர்களின்) பொருட்டு (என்றால், அனேகவருஷகாலம் அநேக ஜன்மங்களை எடுத்து ராக த்வேஷாதிகளினால் பலன்களைக் கோரிச்செய்து வந்த பலாநுபவத்திற்காகப் பிறந்திறந்து கொண்டிருக்கும் ஜீவர்களின் பொருட்டு)

యాథాతథ్యతః யாதாதத்யதஃ — யதார்த்தமாய் ஈச்சுரன் சர்வக்ஞனகையால் (சகலஜீவர்களுக்கும் அவனவன் கர்மாநுசாரமாக)

అర్థాన్ அர்த்தான் — (சேதநாசேதனரூபங்களான) பதார்த்தங்களை

వ్యదధాత్ பங்கிட்டுக் கொடுக்கிறுன். (அவன
வ்யததாத் வன்கர்மாநுசாரமாய் பலன்களைக் கொடுப்பவன் ஈச்சுரனே என்று தெரிந்துகொள்ளவும்.)

தாத்பரியம்.

ஸ்வயம் பிரகாசமானவனும் துவக்கு சக்ஷு சுரோத்திரம்ஜிஹ்வை ஆக்கிராணங்களென்கிற ஞானேந்திரியங்கள் ஐந்தும், வாக்கு பாணி பாதம் பாயு உபஸ்தங்களென்கிற கர்மேந்திரியங்கள் ஐந்தும், பிராணுபான வியானேதான சமானங்களென்ற பிராணுதிகளைந்தும், நாக கூர்ம க்ருகர தேவதத்த தனஞ்சயன் முதலான உபப்பிராணங்களைந்தும், (நாகன் = வாந்தியையும் விக்கலையும் உண்டுபண்ணுவது, கூர்மன் = கண்ணிலே நின்று இரப்பைகளை இமைப்பது, க்ருகரன் = தும்மலையும் அழுகையையுமுண்டு பண்ணுவது, தேவதத்தன் = கொட்டாவியை யுண்டுபண்ணுவது, தனஞ்சயன் = பிராணனிருக்கும்போதும் போனபிற்பாடும் சரீரத்திலிருந்து வீக்கம் முதலானவைகளையுண்டுபண்ணுவது.) மனே, புத்தி, சித்தம் அகங்காரங்களையுடைய அந்தக்கரண மென்கிற இந்த இருபத்துநான்கு தத்துவங்களையுடைய சூக்ஷ்மசரீரமற்றவனும், காயங்கள் நரம்புகள் முதலானவைகளுக்கு ஸ்தானமா யிருக்கிற ஸ்தூலசரீரமற்றவனும், இத்தூல சூக்ஷ்மசரீரங்களின் உற்பத்திக்குச் சாதனமாகும் அவித்தியாஸ்வரூபமான காரணசரீரமற்றவனும், தர்மாதர்மங்களற்றவனும், திரிகால ஞானியும், மனதிற்கும் மனதான சர்வக்ஞனும், எல்லாவற்றிற்கும் சிரேஷ்டனும், தானிருப்ப

தற்குக் காரணாந்தராபேக்ஷயற்று, தனக்குத் தானே இருக்கிறவனாயுமுள்ள மேலே சொல்லப்பட்ட மந்திரங்களிலுள்ள ஆத்மா, இராக த்வேஷாதிகளுடன் அநேக ஜன்மங்களெடுத்து இறந்துகொண்டிருக்கும் ஜீவர்களுக்கு அவனவனுடைய கர்மாநுசாரத்திற் கிசைந்த பலன்களை யேற்படுத்திக்கொடுக்கிறவன் ஈச்சுரனே என்றும், (லஞ்சம் வாங்கினபிற்பாடு ஜயிலில் கைதியா யிருப்பவனே, லஞ்சம் வாங்குவதற்குமுன் ஜட்ஜி என்றாற்போல) இச்சாத் துவேஷங்களினால் விவகாரதிசையில் ஜீவனென்று விவகரிக்கப்பட்டு இச்சாத்துவேஷங்களற்ற பரமார்த்த திசையில்ஈச்சுரன் (ஆத்மாவே) என்றும், சத்குருவை யடைந்து அவரிடத்தில் கொஞ்ச நாள் இடைவிடாமலநுஷ்டிக்கப்பட்டச் சிரவண மனன நிதித்தியாசனங்களினால் உண்டாகும் ஸ்வாநுபவத்தினால் தெரிந்துகொண்டவன், ஆத்மத்துவத்தை யடைந்து சகல ஜனன மரண பயத்திலிருந்து விடுபடுவானென்று இம்மந்திரம் உபதேசிகின்றது.

ஆத்மா ஸ்வயம்பிரகாசனென்பதற்குப் பிரமாணம்.

శ్రు॥ నతత్రసూర్యోభాతినచన్ద్రతారకం
నేమావిద్యుతోభా న్తికుతోయమగ్నిః।
తమేవభా న్తమనుభాతిసర్వం
తస్యభాసాసర్వమిదంవిభాతి॥

(இ - ள்.) ஓ பகவானே ? உன்னுடைய ஸ்வப்பிரகாசத்தினால் சூரிய சந்திராக்னி முதலான சகலமும் பிரகாசிக்கிறவைகளேயல்லாமல் உன்னைத் தவிர ஸ்வயம் பிரகாசத்தையுடையவஸ்துக்கள் வேறொன்றும் சிருஷ்டியில் கிடையாது.

ஆத்மா எங்கும் வியாபித்திருக்கிறரென்பதற்குப் பிரமாணம்.—

శ్లో॥ సమస్తేషువస్తుష్వను స్యూతమేకం
సమస్తాని వస్తూనియ న్నస్పృశన్తి।
వియద్వత్సదా శుద్ధమచ్ఛస్వరూపం ॥

(இ-ள்.) ஆகாசமெப்படி எல்லாவற்றிலும் வியாபித்திருந்த போதிலும் ஒன்றினுடைய நல்வினைதீவினைகளினுல் பாதிக்கப்படாமல் பழுதற்ற சுத்த வஸ்துவாயிருக்கிறதோ, அப்படி ஆத்மா சர்வவியாபியாயும் ஒன்றினுலும் பாதிக்கப்படாத சுத்த வஸ்துவாயிருக்கிறரென்றவும்,

శ్లో॥ అహమాకాశవత్సర్వం బహిరన్తర్గతోఽచ్యుతః ॥
(ఆత్మబోధ - 34)

என்பவைகளே.

ஆத்மா ஸ்தூல சூக்ஷ்ம காரண சரீரங்க ளற்றவனென்பதற்குப் பிரமாணம் :

శ్లో॥ ఉపాధిత్రితయాదన్యమాత్మానమవధారయేత్ ॥
(ఆత్మబోధ - 13)

ஆத்மா, தர்மாதர்ம வர்ஜிதன் என்பதற்குப் பிரமாணம்.—

శ్రు॥ స న సాధునా కర్మణా భూయాన్
నఏవా సాధునా కనీయాన్ ॥

(இ-ள்.) பகவான் (ஆத்மா) சத்கர்மங்களினுல் சந்தோஷிக்கமாட்டான், துஷ்கர்மங்களினுல் துக்கிக்கவுமாட்டான், என்றுல், தத்பலத்தையடைவோனுக்கே சுகதுக்

கங்களேயல்லாமல் பகவானுக்கு எப்படிப்பட்ட சம்பந்தமுமில்லே.

இதற்கு கீதாவசனம்.

శ్లో॥ నాదత్తేకస్యచిత్పాపం నచైవసుకృతంవిభుః॥

భగవద్గీతా. V. 15.

ஆத்மா தானுஞ்செய்யாமல், மற்ருெருவனுல் செய்விக்காமலிருப்பது நிஜமேயானுல், இந்தச் சிருஷ்டியாதிகளேச் செய்தது யார்? யார் எல்லோரையும் பிரவிர்த்திக்கச்செய்கிருர்? எனில்

శ్లో॥ దైవీహ్యేషా * * ॥ భగవద్గీతా VII. 14-ல் சொல்லப்படும் அவித்தையாகிற மாயையே இந்தச் சகல சிருஷ்டிகளுமுண்டாகிறதற்கும் பிரவர்த்திக்கிறதற்கும் மூலகாரணமென்றும், ஆத்மா நிர்விகாரி என்றும் தெரிந்துகொள்ளவும்.

ஆத்மா திரிகால ஞானி என்பதற்குப் பிரமாணம்:—

శ్లో॥ వేదాహంసమతీతాని వర్తమానానిచాఽర్జున।
భవిష్యాణిచభూతాని * ॥ భగవద్గీతా VII. 26.

ஆத்மா மனதிற்கு மனதாயிருக்கிற தென்பதற்குப் பிரமாணம்:—

శ్రు॥ మనసోయేమనోవిదుః॥

శ్రు॥ యన్మనసానమనుతే యేనాహుర్మనోమతమ్।
తదేవబ్రహ్మత్వంవిద్ధి నేదంయదిదముపాసతే॥

(కేనోపనిషత్)

(இ - ள்.) எந்த மனதினுல் ஆத்மா தெரிந்துகொள்ளப்ப டாததோ, எது மனதை அறியுமோ, அதுவே பிர்ம்மமென்று தெரிந்துகொள்ளவும் என்ற கேனோபநிஷத் வாக்கியமேயாம்.

ஆத்மா எல்லாவற்றைப்பார்க்கிலும் சிரேஷ்ட மென்பதற்கு:—

శ్రు॥ పురుషాన్న పరంకించిత్సా కాష్ఠా సా పరా గతిః।

(இ - ள்.) ஆதிபுருஷனுன பகவானைக்காட்டிலும் இதரமா னது இல்லேவேயில்லே. அதேசிரேஷ்டமானது அதே அடை யத்தகுந்தது.

ஒருவஸ்துவே பிர்ம்மமென்றும், ஈச்சுரனென்றும், ஜீவனென்றும் வியவகரிக்கப்படுகின்றதென்பதற்குப் பிரமாணம்:—

శ్రు॥ కింబ్రహ్మేతి హోవాచ? మహదహంకార పృథివ్య
ప్తేజోవాయు రాకాశాత్మకత్వేన బృహద్రూపేణాఽణ్డ కోశేన కర్మ
జ్ఞానార్థరూపతయా భాసమానమద్వయ మఖిలోపాధివినిర్ముక్తం త
త్సకలశక్త్యుపబృంహితమనాద్యన్తం శుద్ధం శివం శాన్తం నిర్గుణ మిత్యా
దివాచ్యమనిర్వాచ్యం చైతన్యంబ్రహ్మ॥

ఈశ్వరఇతిచ, కింతల్లక్షణం? బ్రహ్మైవ స్వశక్తి ప్రకృత్యాభిధే
యమాశ్రిత్య లోకాన్ సృష్ట్వా ప్రవిశ్యాఽన్తర్యామిత్వేన బ్రహ్మాదీ
నాం బుద్ధీన్ద్రియ నియన్తృత్వా దీశ్వరః॥

జీవఇతిచ? ఈశ్వరఏవ బ్రహ్మవిష్ణ్వీశానేన్ద్రాదీనాం నామ
రూపద్వారా స్థూలోఽహమిత్యధ్యాసవశాజ్జీవః॥

(నిరాలంబోపనిషత్.)

(இ - ள்.) மூலப்பிரகிருதியினின்றுண்டான பஞ்சபூதங்களுக்கு அந்தரியாமியாகவும், அந்தப் பஞ்சபூதங்களை அதிக்கிரமித்ததாயும், சகலப்பிரபஞ்சங்களுக் காதாரபூதமானதாயும், நிஷ்காம கர்மத்தினாலும் ஞானத்தினாலும் அடையக்கூடியதாயும், இரண்டற்றதாயும், சகலப்பிரபஞ்சோபாதிகளும் அவைகளின் சக்திகளும் தன்னிடத்தில் லயத்தையடையக்கூடியதாயும், ஆதியந்தமற்றது சுத்தமானது மங்களகரமானது சாந்தமானது என்ற இவ்விசேஷணங்களை அதிக்கிரமித்ததாயு மிருக்கிற சைதன்னிய வஸ்துவே, பிர்ம்மமென்று சொல்லப்படும்.

அப்படிப்பட்ட பிர்ம்மமே, தன்னுடைய சக்தி வியாபகத்தினால் லோகங்களையும் பிரமாதிகளையும் சிருஷ்டித்து, சர்வ பரிபூர்ண வஸ்துவாகையால் தானே அந்தரியாமியாகப்பிரவேசித்து புத்தி இந்திரிய முதலானவைகளை நியமிக்கிறபடியால், ஈச்சுரனெனப்படுகிறது.

அந்தரியாமியாய்ப் பிரவேசித்த இந்த ஈச்சுரனே பிரமன், விஷ்ணு, உருத்திரன், இந்திரன் முதலான ரூபங்களினாலும் பேர்களினாலும் தன்னுடைய சொரூபத்தை மறந்தவனைப்போல இப்போதிருக்கிற ஸ்தூலதேகமே தானென்றெண்ணியிருக்கும் அத்தியாசத்தினால் ஜீவனெனப்படுவான். அவனே "நானொருவன் நானொருவன்" என்று சொல்லிக்கொள்ளும் பேதபுத்தியினால் அநேக ஜீவர்களாயினர்.

இவ்விதமாய் தன்னைத்தான் மறந்தபடியினால் ஜீவேச்சுரபேத முண்டாகி அனேக அநர்த்தங்களுக்குக் காரணமாயிற்று. அப்படிப்பட்ட பேதபுத்தியை சத்சங்கத்தினாலும், சத்குருபதேசத்தினாலும் போக்கடித்துக்கொண்டால், தன்னைத்தான் தெரிந்துகொள்ளுகிறதென்ற ஸ்வாநுபவமுண்டாகும். அதுவே முக்தி எனப்படும், என்று நிராலம்போபநிஷத்துக் கூறுகிறது.

---

## ஒன்பதாவது மந்திரம்

### அவதாரிகை.

இந்த ஈசாவாஸ்யோபநிஷத்தின் முதல் மந்திரத்தில் ஞானநிஷ்டாப்பியாசத்தை யடையும் சாதனங்களைக்குறித்துச் சொல்லப்பட்டது. அதையநுஷ்டிக்க அசமர்த்தனுக விருப்பவனுக்கு நிஷ்காமகருமத்தை இரண்டாவது மந்திரஞ்சொல்லிற்று. இந்த இரண்டு மந்திரங்களின் சாதனங்களும் அவற்றின் பலன்களும் இதுவரைக்குஞ் சொல்லப்பட்டது. இவைகளில் மனது ருசிக்காமல் வேதசாஸ்திரங்களி லங்கங்கே வேறுவேருய்ச் சொல்லப்பட்டிருக்கிற சொல்ப பலன்களில் ஆசக்தியுடையவர்களாகி அதையநுஷ்டித்து அந்தப் பலன்களை யடைவோர்களுக்குண்டாகும் பலாபல விஷயங்களைக்குறித்து இந்த மந்திரஞ்சொல்லுகிறது.

9.

శ్రు॥ అన్ధంతమః ప్రవిశన్తి యేఽవిద్యాముపాసతే।
తతో భూయఇవ తేతమో యఉవిద్యాయాగ్ం రతాః॥

சுருதி ॥ அந்தம்தமப்ரவிசன்தி யேஅவித்யாமுபாஸதே।
ததோபூயஇவதேதமோ யஉவித்யாயாகும்ரதாஃ॥ கூ॥

యే
யே — யார்

అవిద్యామ్
அவித்யாம் — (ஞானத்திற்கு விரோதமானதும் காமக்குரோதாதிகளையும் அகங்காரமகாரங்களையும் அபிவிர்த்தி செய்கிறதும், அதினுல் பிறப்பிறப்புக்குக் காரணமாயிருப்பதுமான) அக்ஞானரூபமாயுள்ள காம்ய கர்மங்களை

| | |
|---|---|
| ఉపాసతే<br>உபாஸதே | (அநுஷ்டிக்கிறார்களோ) உபாஸிக்கிறார்களோ, |
| (తే)<br>(தே) | (அவர்கள்) |
| అన్ధం, తమః<br>அந்தம், தமஃ | காடாந்தகாரமான இருட்டை (சாஸ்திரத்தினாலும் சத்குருவினாலும் திருப்புவதற்கு மிகவும் கஷ்டமான அவிவேக ஸ்திதியை) |
| ప్రవిశన్తి<br>ப்ரவிசந்தி | அடைகிறார்கள். (சம்சாரத்தில் இடைவிடாமல்பிறந்திறந்துகொண்டிருப்பார்கள்.) |
| యే, ఉ (యే, తు)<br>ஏ, உ (ஏ, து) | எவர்களாகிலும் |
| విద్యాయామ్<br>வித்யாயாம் | தேவதாஞானத்தில் (இத்தெய்வத்தை யுபாசித்தால் இன்னபலன் கிடைக்குமென்று வேறுவேறாய்ச் சொல்லுகிற சாஸ்திரங்களைப்பார்த்ததினாலும்,அல்லது கேட்டதினாலும்,அப்பேர்க்கொத்த பலன்களில் ஆசையுடையவர்களாகி, தாமநுஷ்டிக்க வேண்டிய வர்ணாசிரமகர்மங்களை விட்டுவிட்டு அந்தந்த தேவதா உபாஸனையில்மாத்திரம்) |
| రతాః<br>ரதாஃ | (இப்பிரபஞ்ச சுகத்திலும் சுவர்க்கத்தைக்காட்டிலும் தாழ்ந்த லோக சுகங்களிலும்) ஆஸக்தி யுடையவர்களோ, |

| | |
|---|---|
| తే<br>தே | அவர்கள் |
| తతః<br>தத꞉ | (இந்த மந்திரத்தில் சொல்லப்பட்ட அவித்தியோபாஸகர்களான காம்ய கர்மோபாஸகர்களடையும்) அந்த ஸ்திதியைக்காட்டிலும் |
| భూయః, ఇవ<br>பூய꞉, இவ | அதிகமான (மிகவும் இழிவான) |
| తమః<br>தம꞉ | அவிவேகஸ்திதியை |
| (ప్రవిశన్తి)<br>ப்ரவிசந்தி | (அடைகிருர்கள்.) |

தாத்பரியம்.

எவர்கள் ஞானத்திற்கு விரோதமானதும், காமக்ரோதாதிகளையும் அகங்கார மமகாரங்களைம் அபிவிர்த்திசெய்கிறதும், அதன் மூலமாய் ஜநநமரண ரூபமான ஸம்சார பரம்பரைக்கு ஹேதுவாயுமிருக்கிற அவித்தியா ஸ்வரூபமானதுமான காம்ய கர்மங்களை அநுஷ்டிக்கிருர்களோ, விஷய சுகங்களில் இச்சையையுடைய அவர்கள், சாஸ்திரங்களினுலும் சத்குருவினுலும் திருப்பமுடியாதவர்களாகி இச்சம்சாரத்திலிருந்து கரையேறமுடியாமல் பிறந்திறந்துகொண்டிருக்கிற அவிவேக ஸ்திதியை யடைவார்கள். எவர்கள் இயற்கையாகவே விஷயாசக்தர்களாகி வெவ்வேறு தேவதைகளை ஆராதிக்கிறதினுல் வேறு வேறு பலன்களுண்டாகுமென்று சொல்லும் சாஸ்திரங்களைப்

படிப்பதினாலும் கேட்பதினாலும், தாம் நியாயமாய் அநுஷ்டிக்கவேண்டிய வர்ணச்சிரம கர்மங்களை விட்டு விட்டு இப்பிரபஞ்ச சுகத்திற்காகவும் ஸ்வர்க்கத்தைக் காட்டிலும் இழிவான தேவதாலோக சுகத்திற்காக வும் அந்தந்த தேவதைகளை ஆராதிக்கிறார்களோ, அப்படிப்பட்டவர்கள் இந்த மந்திரத்தின் முதற்பா தத்திற் சொல்லப்பட்ட அவித்தியோபாஸகர்களான (காம்யகர்மாநுஷ்டானஞ்செய்பவர்களான) கர்மிகளை ப்பார்க்கிலும் அதிகமான அவிவேகஸ்திதியை அடை வார்கள். ஆகையால் ஞாநநிஷ்டாப்பியாசத்தை யநுஷ் டிக்கமுடியாதவர்கள் நிஷ்காம கர்மத்தைச் செய்யப் பிரயத்தனஞ் செய்யவேண்டுமேயல்லது, காம்ய கர் மாநுஷ்டானத்தைச்செய்யக் கொஞ்சமும் பிரயத்த னஞ்செய்யக்கூடாது என்றால், காம்யகர்மத்தையும் அல்பதேவதா உபாஸனையையும் செய்ய மனதில்கூட நினைக்கக்கூடாதென்று இந்த மந்திரம் காம்ய கர்மத் தையும் அல்பதேவதா உபாஸனையையும் நிந்தித்து உபதேசிக்கிறது.

---

## பத்தாவது மந்திரம்.

### அவதாரிகை.

எத்தனை விதங்களாகச் சொன்னபோதிலும் அதில் புத்தியைச்செலுத்தாமல் காம்யகர்மத்திலேயே இச் சையுடையவர்கள்கூட நன்மையை யடைவதற்காக பெரியோர்களா லநுக்கிரகிக்கப்பட்ட மார்க்கத்தை இந்த மந்திரம் உபதேசிக்கின்றது. எப்படியெனில்:-

10.

శ్రు ॥అన్య దేవాహుర్విద్యయాఽన్యదాహురవిద్యయా।
ఇతిశుశ్రుమధీరాణాం యేన స్తద్విచచక్షిరే॥ ౧౦॥

சுருதி ॥ அந்யதேவாஹுர்வித்யயா அந்யதாஹுரவித்யயா।
இதிசுச்ருமதீராணாம் ஏநஸ்தத்விசசக்ஷிரே ॥௧0॥

యే
யே — எந்தப் பெரியோர்கள்

నః
நஃ — (ஞானநிஷ்டாப்பியாசத்திலாகிலும் நிஷ்காமகர்மத்தைச் செய்து சித்த சுத்தியையும் அதனால் ஞானத்தையடைகிறதிலாகிலும் ஆஸக்தியற்ற) எங்களுக்கு

తత్
தத் — அந்த காம்யகர்மத்தையும், தேவதா ஞானத்தையும்

విచచక్షిరే
விசக்ஷிரே — (பரம்பராக்கிரமமாக வந்துகொண்டிருக்கிற கீழே சொல்லப்போகிற மார்க்கத்தைச்) சொன்னார்களோ,

(తే)
(தே) — (அவர்கள்)

విద్యయా
வித்யயா — தேவதா ஞானத்தினால் (பிர்ம்ம விஷ்ணு ருத்திரர்களைத்தவிர வேறே க்ஷுத்ர (அல்ப) தெய்வங்களையுபாசிக்கிறதினால்)

అన్యత్, ఏవ
அந்யத், ஏவ — வேறுபலத்தையே (வெவ்வேறான பலத்தையே)

| | |
|---|---|
| ఆహుః<br>ஆஹுஃ | சொன்னார்கள். |
| అవిద్యయా<br>அவித்யயா | காம்யகர்மத்தினுல் |
| అన్యత్<br>அந்யத் | வேறுபலத்தை |
| ఆహుః<br>ஆஹுஃ | சொன்னுர்கள். |
| ఇతి<br>இதி | இந்த இரண்டு விதங்களான |
| ధీరాణామ్<br>தீருணும் | பெரியோர்களுடைய |
| (వచనమ్)<br>(வசனம்) | (வாக்கியத்தை) |
| శుశ్రుమ<br>சுச்ருமு | கேட்கிறோம். |

தாத்பரியம்.

ஞானநிஷ்டாப்பியாசத்திலும் நிஷ்காம கர்மாநுஷ்டானத்திலும் ஆஸக்தியற்றவர்கள் நாஸ்திகபுத்தியால் கெட்டுப்போவார்களென்று எண்ணி, விஷயசுகத்திலேயே அதிகபிரியத்தை யடைந்திருக்கிற எங்களைப் போலொத்த பேர்களுக்கு இப்பிரபஞ்சசுகம் உண்டாகும்படியாக சில கர்மோபாஸனையையும் அதில் மனதுரமித்த பிற்பாடு தேவதா உபாஸனையையும் எந்தப்

பெரியோர்கள் தொன்றுதொட்டு வரக்கூடியதாய் ஏற்படுத்தினர்களோ, அப்பெரியோர்கள்.

ஸ்ரு॥ "విద్యయా దేవలోకః। కర్మణా పితృలోకః"॥

(இ-ள்.) தேவதா உபாஸனையைச் செய்பவர்களுக்கு அந்தந்த தேவதா லோகப்பிராப்தியும், கர்மத்தினல் அந்தந் தக்கர்மங்களுக்குத் தக்க பிதுருலோகப் பிராப்தியும் உண்டாகும்.

என்ற சுருதிவாக்கியப்படி வேறுவேருயுள்ள பலன்களைச் சொன்னர்கள். ஆகையால், விஷயாஸக்தர்களாயும் பேதபுத்தியையுடையவர்களாயு முள்ளவர்களுக்கு இந்த மந்திராநுஷ்டானம் மிகவும் அவசியமென்றும்; ஜநநமரணங்களுக் காதாரமாயுள்ள இச்சம்சாரத்திலிருந்து விடுபடவேண்டு மென்பவர்களுக்கு ஞாநநிஷ்டாப்பியாசம் அவசியமென்றும், இந்த மந்திரத்திற் சொல்லியபடி காம்யகர்மத்தையும் தேவதா உபாஸனையையும் ஆசரிக்கிறவர்களுங் கூட,பகவத்பிரீதியாக அநுஷ்டிக்கும் விஷயத்தில் அவர்களும் நன்மையையே யடைவார்களென் றுபதேசிக்கிறது.

---

## பதினெராவது மந்திரம்.

### அவதாரிகை.

முதலிலிருந்த சுத்தபிர்ம்மமானது தன்னிடத்திலீனமாயிருக்கிற அவ்வியாகிருதம், மஹதகங்காரம், மூலப்பிரகிருதி, மாயை, முதலிய பேர்களால் விளங்குகிற ஸ்வசக்திவியாபகத்தினல் தன்னுடைய ஸ்வரூபம் வியாபிக்கப்பட்டிருக்கிறது. இப்படி பரவியாபகத்திற்குக் காரணமானபடியால் பரப்பிர்மமென்று

விவகரிக்கப்படுகிறது. அப்படிப்பட்ட மாயையிலிருந்து பிரமன், விஷ்ணு, உருத்திராதிகளும், அவித்தியாஸ்வரூபமான ஆவரண விக்ஷேபசக்திகளுமுண்டாயின. அந்த அவித்தையிலிருந்து ஜீவத்துவமுண்டாயிற்று. இப்படி சுத்த பிர்ம்ம ஸ்திதியிலிருந்து ஜீவ ஸ்திதியை யடைவதற்கு மாயை, அவித்தை என்ற இரண்டு ஸ்தானங்கள் (படிகள்) இருக்கின்றன. அப்படியே ஜீவஸ்திதியிலிருந்து சுத்த பிர்ம்ம ஸ்திதியை யடைவதற்கு அவித்தை மாயை என்ற இரண்டு ஸ்தானங்களை (படிகளை) க் கடக்கவேண்டும். ஆகையால் அவித்தையென்ற படியைக்கடந்து மாயையென்ற படியேறுகிறதற்குச் சாதனமான (மாயோபாதிகர்களான பிரமன் விஷ்ணு உருத்திராதிகளைத்தவிர) இதரதேவதாருதன (உபாஸந) ரூபமான அதம சகுணோபாஸனுமார்க்கத்தை இம்மந்திர முபதேசிக்கிறது.

11.

శ్రు॥ విద్యాంచాఽవిద్యాంచ
యస్తద్వేదోభయగ్ సహ।
అవిద్యయామృత్యుంతీర్త్వా
విద్యయాఽమృతమశ్నుతే॥ ౧౧॥

சுருதி || வித்யாம்ச அவித்யாம்ச
யஸ்தத்வேதோபயகும்ஸஹ |
அவித்யயாம்ருத்யும்தீர்த்துவா
வித்யயா அமிருதமச்னுதே || ௧௧ ||

| | |
|---|---|
| యః<br>யஃ | எவன் |
| విద్యాం, చ<br>வித்யாம், ச | தேவதாஞானத்தையும் (காரணஸ்வரூபத்தையும்) |
| అవిద్యాం, చ<br>அவித்யாம், ச | கர்மத்தையும் (காரியஸ்வரூபத்தையும்) |
| తత్<br>தத் | அந்தக் (காரியகாரணங்கள்) |
| ఉభయం, సహ<br>உபயம், ஸஹ | இரண்டையுங்கூட |
| (ఏకేనపురుషేణ)<br>ஏகேந புருஷேண | (ஒருவனுலேயே) |
| (అనుష్ఠేయమ్)<br>அநுஷ்டேயம் | (அநுஷ்டிக்க வேண்டியதாய்) |
| వేద<br>வேத | தெரிந்து கொள்ளுகிருனே (காரியகாரணங்களுக்குள்ள அபேதத்தைத் தெரிந்துகொள்ளுகிருனே) |
| సః<br>ஸஃ | அவன் |
| అవిద్యయా<br>அவித்யயா | (காரியரூபமான) கர்மத்தினுல் |
| మృత్యుం, తీర్త్వా<br>ம்ருத்யும், தீர்த்வா | மரணத்தை யதிக்கிரமித்து (காரியரூபமான குடம், சட்டி, கலயம் முதலியவைகள் காரணரூபமான மண்ணைக் காட்டிலும் வேறில்லையென்று அபேதபுத்தி யுண்டாகிறுப்போல, மிருத்யுவாகிய மரணத்திற்கும் பிறப்பிற்கும் ஹேதுவான காரியரூப |

மாகிய காம்யகர்மங்களுக்கும் காரணரூபமாகிய தேவதா உபாஸனைக்கும் அபேதத்தை என்றால், தேவதாலோகத்தை யடையவேண்டுமென்கிற காரணமான இச்சையே காரியரூபமாகியகாம்ய கருமமாகையால் கர்மங்களை நிஷ்காமமா யநுஷ்டிப்பதினால்)

విద్యయా
வித்யயா
(காரணரூபமான) தேவதா ஞானத்தினால்

అమృతమ్
அம்ருதம்
(இந்த அதம சகுணோபாஸனையினால் மத்திம சகுணோபாஸனையையும், அதனால் உத்தம சகுணோபாஸனையான சித்த சுத்தியையும், பின்பு ஞானத்தையும், அதனால் சித்தவிச்சிராந்தி (மனோலயம்) யாகிய மோக்ஷத்தையும், என்றால்,

శ్లో॥ ఆకాశాత్పతితంతోయం
యథాగచ్ఛతిసాగరం।
సర్వదేవనమస్కారః
కేశవంప్రతిగచ్ఛతి॥

(இ - ள்.) ஆகாசத்திலிருந்து விழும் மழைநீர் பிரவாகரூபமான நதியின் வழியாய் சமுத்திரத்தை யடைந்து தன்னுடைய பேரையும், ஊரையும், ரூபத்தையும் இழ

ந்து சமுத்திரமேயாகி விடுமோ, அப்படி
சகலதேவதா உபாஸனே, நமஸ்கார மூத
லிய ரூபமான நதி, கேசவனென்ற சமுத்
திரத்தையடைந்த பின் தேவதைகளெ
ன்ற பேர்முதலானவைகளற்று கேசவஸ்வ
ரூபமே யாகிறாப்போல, அபேதஸ்திதியே
மோக்ஷமாகையால் பரம்பராக்கிரமமாய்,
மோக்ஷத்தை

அஶ்நுதே
அச்னுதே அடைகிறான்.

**தாத்பரியம்.**

உத்தமம், மத்திமம், அதமம் என சகுணதியானம் மூன்றுவிதமாயிருக்கிறது. ஞானநிஷ்டையை யடையும் பொருட்டு சத்குருப தேசத்தை யடைந்து அந்த லக்ஷியத்தில் தைல தாரையைப்போல இடையறாது சிந்திக்கிறதே உத்தம சகுணோபாஸனே. பிரம, விஷ்ணு, உருத்திராதிகளே சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறபடி உபாசிக்கிறது மத்திம சகுணோபாஸனே. அல்பதேவதைகளே யுபாசிக்கிறது அதம சகுணோபாஸனே. இம்மந்திரத்தினால் அதமசகுணோபாஸனே யானது சொல்லப்படுகிறது. அதையும் ஈச்சுரார்ப்பணமாய் செய்தால் பரம் பராக்கிரமமாய் மோக்ஷத்தையே அடையலாம்.

எப்படியெனில், பானேசட்டி கலயம் முதலான காரியஸ்வரூபங்கள் காரணமான மண்ணேக்காட்டிலும் வேறல்லாததுபோல, அவித்தையென்கிற காரியஸ்வரூபமான காம்ய கர்மத்தையும், வித்தையென்கிற

காரண ஸ்வரூபமான தேவதா ஞானத்தையும், முன் சொன்ன திருஷ்டாந்தப் பிரகாரம் எவன் அபேத மாய் பார்க்கிருனே, அவன் ஜநநமரண சம்சாரத் திற்கு ஏதுவான காம்யகர்ம முதலானவைகளை அதிக் கிரமித்து பரம்பராக்கிரமமாய் மோக்ஷத்தை யடை கிருன் எனில், அவித்தியாஸ்வரூபமான காம்யகர்மத் தையும் வித்தியஸ்வரூபமான தேவதா உபாஸனத் யும் ஈச்சுரார்ப்பண புத்தியாய்ச் செய்கிறபடியால் அதமசகுணோ பாஸனையை அதிக்கிரமித்து மத்திம சகுணோபாஸனையையும், தன்மூலமாய் உத்தமசகு ணோபாஸனையையும் அதனுல் ஞானத்தையும் பிற்பாடு தத்பலமான மோக்ஷத்தையும் பரம்பராக்கிரமமாய் அடைகிருனென்று இந்த மந்திரம் உபதேசிக்கின் றது.

ஞானகர்மங்களிரண்டும் ஒரேமுடிவை அடைவதற் குச் சாதனங்களென்பதற்குப் பிரமாணம்:—

శ్లో॥ యత్సాంఖ్యైః ప్రాప్యతేస్థానం తద్యోగైరపిగమ్యతే।

ఏకంసాంఖ్యంచయోగంచ యఃపశ్యతిసపశ్యతి॥

భగవద్గీతా. VIII. 8.

இவ்விடத்தில் சாங்கிய யோக சப்தங்களுக்கு ஞா னம், நிஷ்காமகர்மமென்று அர்த்தமாம்.

அபேத தர்சனத்தால் மோக்ஷங் கிடைக்குமென்ப தற்குப் பிரமாணம்:—

శ్రు॥ భూతేషు భూతేషు విచిన్త్యధీరాః।
ప్రేత్యాస్మాల్లోకాదమృతాభవన్తి॥ (కేనోపనిషత్ 2-5)

(இ - ள்.) சகல வஸ்துக்களிலேயும் தானே இருக்கிறதாகத் தெரிந்துகொள்ளும் தீரனுக்கு இச்சென்மத்திலேயே மோக்ஷங் கிடைக்கும்.

---

## பனிரண்டாவது மந்திரம்.

### அவதாரிகை.

பதினொருவது மந்திரத்தில் அவித்தியையும் அவித்தியாகாரியத்தையும் உபாஸிக்கிறவர்களான அதம சகுணோபாஸகர்களை நிந்தித்து, அவர்களுங்கூட அந்த உபாஸனையை ஈச்சுரார்ப்பணமாகச் செய்வார்களேயானால், பரம்பராக்கிரமமாய் மோக்ஷத்தையே யடைவார்களென்று சவிஸ்தாரமாய்ச் சொல்லப்பட்டது. அப்படியே மாயையையும் மாயாகாரியங்களையும் உபாஸனை செய்கிறவர்களாகிய மத்திம சகுணோபாஸகர்களை நிந்தித்து, அவர்களுங்கூட அந்த உபாஸனையை ஈச்சுரார்ப்பணமாகச் செய்யும்பக்ஷத்தில், பரம்பராக்கிரமமாய் மோக்ஷத்தையே யடைவார்களென்று இந்த மந்திரம் முதற்கொண்டு மூன்று மந்திரங்களாலுபதேசிக்கப்படுகின்றது. எப்படியெனில்:—

12.

శ్రు॥అన్ధన్తమః ప్రవిశన్తి యేఽసమ్భూతిముపాసతే।
తతో భూయఇవ తేతమో య ఉసమ్భూత్యాగ్ రతాః॥

சுருதி ॥ அந்தன்தமஃப்ரவிசன்தியே அஸம்பூதிமுபாஸதே।
ததோபூயஇவதேதமோய உஸம்பூத்யாகும்ரதாஃ॥ கஉ॥

| | |
|---|---|
| 𑌯𑍇 யே | எவர்கள் |
| 𑌅𑌸𑌂𑌭𑍂𑌤𑌿𑌂 அஸம்பூதிம் | (அவ்யாக்ருதமென்றும், அவித்தியா காரணமென்றும், காம்யகர்மபீஜபூதமென்றும், மூலப்பிரகிருதி என்றும் வியவகரிக்கப்படுகிற) மாயையை |
| 𑌉𑌪𑌾𑌸𑌤𑍇 உபாஸதே | உபாஸிக்கிருர்களோ |
| 𑌤𑍇 தே | அவர்கள், (சிருட்டிகர்த்தாவான ஈச்சுரனைக்குறித்த விசாரணை தேவையில்லை. இந்தக் காணப்படுகிற சகலமும் தானுகவே யுண்டாகின்றன, தானுகவே இருக்கின்றன, தானுகவே நசிக்கின்றன, நாம் இறந்தபிற்பாடு மறுபடியும் பிறக்கிறதென்பதில்லை; கர்மஞான காண்டங்களை யெடுத்துரைக்கும் வேதம் நமக்கு அநாவசியம்; நாம் துன்மார்க்கத்தில் பிரவேசிக்காமல் நம்முடைய மனே இஷ்டப்பிரகாரம் நியாயமாக இருந்து, இறந்தோமேயானுல் முத்தி என்பது நமக்கு ஸ்வதசித்தமாயே இருக்கிறது என்று தம்முடைய மனது போனவழி ஸ்வயேச்சையாக இருக்கிறவர்கள்) |

| | |
|---|---|
| అన్ధం, తమః<br>அந்தம், மதம் | அதிகமான அவிவேக ஸ்திதியை (இடைவிடாமல்பிறந்திறந்துகொண்டிருக்கும் ஸ்திதியை) |
| ప్రవిశన్తి<br>ப்ரவிசந்தி | அடைகிருர்கள் |
| యే,ఉ, (యే,తు)<br>யே, உ, யே, து | எவர்கள் |
| సమ్భూత్యామ్<br>ஸம்பூத்யாம் | (மாயோபாதிகனும் காரியபிர்ம்மஸ்வரூபனுமிருக்கிற ஈச்சுரன், ஸூத்திராத்மா என்கிற இப்பேர்களால் வியவகரிக்கப்படுகிற) ஹிரண்ணியகர்ப்பனிடத்தில் |
| రతాః<br>ரதாஃ | ஆஸக்தியுடையவர்களோ, (அணிமாதிசித்தி முதலானவைகளில் ஆசையுடையவர்களோ) |
| తే<br>தே | அவர்கள், (அணிமாதி சித்திகளிளுசையினுல் தானநுஷ்டிக்க வேண்டிய வர்ணுச்சிரம கர்மங்களை விட்டுவிட்ட அவிவேகிகள்) |
| తతః<br>ததஃ | அதைக்காட்டிலும் (மாயோபாஸகர்களடையும்ஸ்திதியைப்பார்க்கிலும்) |
| భూయః<br>பூயஃ | மிகுந்த (இழிவான) |
| తమః, ఇవ<br>தமஃ, இவ | அவிவேகஸ்திதியையே |

ప్రవిశ న్తి
ப்ரவிசந்தி அடைகிருர்கள்.

தாத்பரியம்.

பிரபஞ்ச சிருஷ்டிக்கு ஒருகர்த்தாவேண்டிய தவசியமில்லே. ஏனெனில், இந்தக்காணப்படுகிற சகலமும் தானுகவே உண்டாகி, தானுகவே அபிவிர்த்தியடைந்து தானுகவே நசிக்கின்றன. நாம் இறந்தபிறகு மறுபடியும் பிறப்போமென்பதில்லே. உலகத்திற் பிறப்பதற் கெதுகாரணமோ, பிறந்தபிறகு நாம் என்ன செய்யவேண்டுமோ என்கிறவைகளே விவரித்துக் காண்பிக்கிற கர்மகாண்டத்தையும், ஞானத்தையடைவதெப்படி, ஜநநமரணத்தி னின்றும் விடுபடுவதெப்படி என்கிறவைகளே வெளிப்படுத்தும் ஞானகாண்டத்தையும், உடைத்தாயிருக்கிற வேதத்துடன் நமக்கொரு பிரயோஜனமு மில்லே. நாம் இறந்தபிறகு முக்தி ஸ்வத சித்தமாகவே இருக்கிறது, என்றுநினேத்து தன்னுடைய இஷ்டப்பிரகாரம் ஜீவனஞ்செய்துகொண்டிருக்கும் அவிவேகிகள், (Agnostics) இடைவிடாமல் பிறந்திறந்துகொண்டே யிருப்பார்கள். இவர்களுடைய கதி இப்படியிருக்க, தாங்களநுஷ்டிக்கவேண்டிய ஸ்வர்ணுச்சிரம கர்மங்களே விட்டுவிட்டு ஞானத்தையடைய பிரயத்தனப்படாமல் அணிமாதிசித்திகளில் ஆசையுண்டாகி அந்தந்த கிரியைகளேயடைவதற்காக வேறுவேறு தெய்வங்களே யுபாசிக்கிறவர்கள் முன்சொல்லப்பட்ட மாயோபாஸகர்களேக்காட்டிலும் மிகவும் இழிவான ஸ்தியையடைவார்களென்றும் இந்த மந்திர முபதேசிக்கிறது.

---

## பதின்மூன்றாவது மந்திரம்.

### அவதாரிகை.

எத்தனைவிதங்களால் சொல்லினும் தெரிந்துகொள்ளாமல் அணிமாதி சித்திகளில் ஆஸக்தியும், தன்னுடைய வர்ணாச்சிரம கர்மாநுஷ்டானங்களில் ஆஸக்தியற்றவர்களுங்கூட நன்மையை யடையவேண்டி பெரியோர்களால் அநுக்கிரகிக்கப்பட்டிருக்கிற மார்க்கத்தை இந்த மந்திரம் உபதேசிக்கின்றது. எப்படியெனில்:—

13.

శ్రు॥ అన్యదేవాహుస్సమ్భవా దన్యదాహురసమ్భవాత్।
ఇతిశుశ్రుమధీరాణాం యేన స్తద్విచచక్షిరే॥

சுருதி || அந்யதேவாஹுஸ்ஸம்பவா தந்யதாஹுரஸம்பவாத்|
இதிசுச்ருமதீராணாம் யேநஸ்தத்விசசக்ஷிரே || கங ||

యే
யே — எவர்கள்

నః
நஃ — (ஞானநிஷ்டாப்பியாசத்திலும், நிஷ்காமகர்மத்தைச் செய்து சித்திசுத்தியையும் தன்மூலமாய் ஞாநத்தையுமடைகிறதிலும் ஆஸக்தியற்ற) எங்களுக்கு

తత్
தத் — (கஉ-வது, மந்திரத்தில் சொல்லப்பட்ட ஹிரண்யகர்ப்பன் மாயை இவைகளின்) உபாஸனையை

| | |
|---|---|
| విచక్షిరే<br>விசக்ஷிரே | (பரம்பராக்கிரமமாய் வந்துகொண்டிருக்கிற அடியிற் சொல்லப்போகிற மார்க்கத்தைச்) சொன்னார்களோ, |
| (తే)<br>தே | அவர்கள் |
| సమ్భవాత్<br>ஸம்பவாத் | (காரியஸ்வரூபரான) ஹிரண்யகர்ப்பனால் |
| అన్యత్, ఏవ<br>அந்யத், ஏவ | வேறேபலத்தையே (அணிமாதிபலத்தையே) |
| ఆహుః<br>ஆஹு꞉ | சொன்னார்கள். |
| అసమ్భవాత్<br>அஸம்பவாத் | (காரணஸ்வரூபமான) மாயையினால் |
| అన్యత్<br>அந்யத் | வேறேபலத்தையே (பிறப்பிறப்புள்ளதாயுள்ள மாயையி லொடுங்குகிற பலத்தையே) |
| ఆహుః<br>ஆஹு꞉ | சொன்னார்கள். |
| ఇతి<br>இதி | இந்த இரண்டு விதங்களா யுள்ள |
| ధీరాణామ్<br>தீராணாம் | (எல்லோரும் நன்மையையடையட்டுமென்றெண்ணிச் சொன்ன) பெரியோர்களுடைய |

(వచనమ్) வாக்கியத்தை
(வசநம்)

శుశ్రుమ கேட்டிருக்கிறோம்.
சுச்ரும

தாத்பரியம்.

மோக்ஷசாதனமான நிஷ்காமகர்மத்திலும், ஞான நிஷ்டாப்பியாசத்திலும் இச்சையற்று இந்தப்பிரபஞ்சசுகத்திலும் தேவதாலோக சுகத்திலும், அணிமாதி சித்தியிலும் கவர்ந்திருக்கிற மனதையுடைய எங்களைப்போலொத்தவர்களுக்குப் பெரியோர்களால் ஏற்படுத்தப்பட்டு பரம்பராக்கிரமமாய் வந்துகொண்டிருக்கிற ஹிரண்யகர்ப்போபாஸனையையும், மாயோபாஸனையையுஞ் செய்பவர்களுக்கு வேறுவேறுபலன்களுண்டு என்பதை அவர்களுடையவசனங்களால் கேள்விப்பட்டிருக்கிறோம். அப்படிப்பட்ட உபாஸனைகளைபலாபேக்ஷையைவிட்டு அநுஷ்டிக்கும் பக்ஷத்தில் பரம்பராக்கிரமமாய் அவர்களும் மோக்ஷத்தையேயடையக் கூடியசக்தியுடையவர்களாகி இராகத்துவேஷாதிகளுக்கு ஆதாரமாகிய பேதபுத்தியைவிட்டு ஞானநிஷ்டாப்பியாச ஸ்திதியை அடைவார்களென்றும் இந்தமந்திரம் உபதேசிக்கிறது.

---

## பதினான்காவது மந்திரம்.

### அவதாரிகை.

மேற்சொன்ன இரண்டு மந்திரங்களால் சொல்லப் பட்ட மத்திமசகுணோபாஸனையை நிஷ்காமமாய்ச் செய்யும் விஷயத்தில் மாயை என்கிறபடியையுங் கடந்து கிரமமாய் மோக்ஷத்தையடைலாமென்று இந்த மந்திரம் உபதேசிக்கிறது.

14

శ్రు॥ సమ్భూతించవినాశంచ
యస్తద్వేదోభయగ్ సహ।
వినాశేనమృత్యుంతీర్త్వా
ఽసమ్భూత్యాఽమృతమశ్నుతే॥

சுருதி ॥ சம்பூதிஞ்ச விநாசஞ்ச
யஸ்தத்வேதோபயகும்ஸஹ
விநாசேந ம்ருத்யும்தீர்த்வா
அஸம்பூத்யா அம்ருதமச்நுதே.

యః
யः    எவன்

అసమ్భూతిం,చ (సమ్భూతించ [ஸம்பூதிஞ்ச] என்று மந்
அஸம்பூதிம், ச    திரத்திலிருந்த போதிலும்,

"సమ్భూతిం చేత్యత్రా వర్ణలోపేన నిర్దేశో
ద్రష్టవ్యః॥"

என்று பாஷ்யத்தி லிருக்கிறபடியால் "అసమ్భూతించ" என்று எழுதப்பட்டது) காரணஸ்வரூபமான மாயோபாஸனையையும்

వినాశంచ
விநாசம்ச
(அனைச்சுவர்யமானதும், அதர்மகாமாதி தோஷசகிதமானதுமான அணிமாதிப்பிராப்தி சாதனமாகி) ஜநநமரணத்திற்கேதுவாயுள்ள காரியஸ்வரூபமான ஹிரண்யகர்ப் போபாஸனையையும்

తత్, ఉభయం, సహ
தத், உபயம், ஸஹ
அந்தக் காரிய காரண ஸ்வரூபமான இரண்டையுங்கூட

(ఏకేనపురుషేన) ஒருவனாலேயே
ஏகேநபுருஷேண

(అనుష్ఠేయమ్) (பலனைக்கோராமல்) அநுஷ்டிக்கப் படவேண்டியதாய்
அநுஷ்டேயம்

వేద
வேத
(காரியகாரணங்களி னபேதத்தை) தெரிந்துகொள்ளுகிறானோ

వినాశేన
விநாசேந
(அபேதபுத்தியுடன் செய்யப்படுகிற) காரியஸ்வரூபமான ஹிரண்யகர்ப் போபாஸனையினால்

మృత్యుం, తీర్త్వా
ம்ருத்யும், தீர்த்வா
(முன்சொல்லப்பட்ட அனைச்வர்ய, அதர்ம காமாதி தோஷசகிதமான

அணிமாதிப் பிராப்திகளுக்குப் பலமான) ஜநந மரணப் பிரவாகத்தைக்கடந்தவனாகி

అసమ్భూత్యా
அஸம்பூத்யா — (காரணஸ்வரூபமான அவ்யாக்ருதம் என்கிற) மாயோபாஸனையினால்

అమృతమ్
அமிருதம் — (அபேதபுத்தியினால் செய்யப்படும் இந்த மத்திம சகுணோபாஸனையால் உத்தமசகுணோபாஸனையான சித்த சுத்தியையும், அதனால் ஞானத்தையும், பிற்பாடு சித்தவிச்ராந்தி என்கிற) மோக்ஷத்தையும்

అశ్నుతే
அச்நுதே — அடைகிறான்.

### தாத்பரியம்.

பானை குடம் சட்டி கலயம் முதலிய காரியஸ்வரூபமாயுள்ள பதார்த்தங்கள் காரணமான மண்ணைக்காட்டிலும் வேறல்லாததுபோல, காரியஸ்வரூபமான ஹிரண்யகர்ப்போபாஸனையானது காரணமான அவ்யாகிருதமென்கிற மாயோபாஸனையைக் காட்டிலும் வேறல்லவென்று நிஜமான அபேதஸ்திதியை யார்தெரிந்து உபாஸிக்கிறானோ அவன் இந்த மத்திமசகுணோபாஸனையைக்கடந்து உத்தம சகுணோ பாஸனஸ்திதியையடைந்து அதன் மூலமாய் நிஷ்டையையுடையவனாகி பரம்பராக்கிரமமாய் மோக்ஷத்தை யடைவானென்று இந்த மந்திரமுபதேசிக்கின்றது.

---

## பதினைந்தாவது மந்திரம்.

### அவதாரிகை.

பலன்களிலிச்சையுடையவன் காம்யகர்மாநுஷ்டானத்தினாலேயும் தேவதாராதனையினாலேயும், அவ்யாக்ருதமென்கிற மாயோபாஸனையினாலேயும், இகலோக சுகம்முதற்கொண்டு பிரகிருதிலயம் வரைக்குமுள்ள பிரவிர்த்திமார்க்கங்களைக்குறித்தும், இதின் ஏழாவது மந்திரத்தில் “ఆత్మైవాభూద్విజానతః।” சகலமும் பகவத் (ஆத்ம) ஸ்வரூபமே என்று சொல்லப்படும் நிவர்த்தி மார்க்கத்தைக் குறித்தும் அங்கங்கே இதுவரையிலேயே சொல்லப்பட்டது. எனின்,

பிரபஞ்சத்திலிருக்கிற சிஷ்யரூபங்களான எல்லோரையும் இரக்ஷிப்பதற்காக அவரவர்களுக்குத் தக்க ஸ்திதியை ஏற்படுத்திக்கொண்டு அநுஷ்டித்து எப்படியாகிலும் காமக்குரோதாதிகளையும், அகங்கார மமகாரங்களையும் மற்றுமுள்ள துற்குணங்கள் யாவற்றையும் விட்டுவிட்டு நன்மையையடையும்பொருட்டு பிரவிருத்தி நிவிர்த்திசாதனங்களிதுவரைக்குமே சொல்லப்பட்டிருக்கின்றன.

ஸ்வஸ்வரூபானுபவமான ஆத்மாநுபவம், இதுவரைக்குஞ் சொல்லப்பட்ட அதம மத்திம சகுணோபாஸனைகளினால்,

శ్రు॥ నాయమాత్మా ప్రవచనే నలభ్యో
నమేధయా నబహునా శ్రుతేన ।
అయమేవైష వృణుతే తేనలభ్య
స్తస్యైష ఆత్మా వివృతే తనూగ్ంస్వామ్ ॥

(இ - ள்.) சர்வபரிபூர்ணமாயும் சர்வாந்தரியாமியாயுமிருக்கிற ஆத்மா இப்படிப்பட்டது அப்படிப்பட்டதென்று வாக்கினால் பிரவசனஞ் செய்வதினாலும், வியவகாரத்திலும் ஆர்ஜனையிலும் பயின்றவனும், சதாவதானம் ஸஹஸ்ராவதானம் முதலியவற்றிற் றேர்ந்தவும், ஏகஸந்தக்கிராஹியுமான நல்ல புத்திசாலியா யிருப்பதினாலும், பரமார்த்தத்திலும் பகவத் விஷயத்திலும் மிகவும் ஆஸக்தியுடையவனைப்போல நடிப்பதினாலேயும், இவை முதலான அநேகவிதமான வெளிவிவகாரத்தினால் (பாஹ்யோபகரணங்களினால்) அடையமுடியாதது. அந்த ஆத்மா வேறெதனாலடையக்கூடுமெனில், இராகத்வேஷாதி துர்க்குணங்களை விட்டுவிட்டு சத்குருவையடைந்து அவரிடத்தில் உபதேசத்தைப் பெற்று வைராக்கியத்துடன் கூடினவிடாமுயற்சியால் எண்ணெயின் தாரைபோல இடைவிடாமல் அவர் உபதேசித்த லக்ஷியத்தில் மனதை நிறுத்தி அநுஷ்டிக்கிற ஏகாக்கிர சித்தத்தை யடையக்கூடிய அப்பியாசத்தினால்மாத்திரம் அடையக்கூடுமேயல்லாமல் வேறே விதத்திலும் அடையமுடியாது.

என்பதற்குச் சுருதிகள் சாக்ஷியா யிருப்பதினால் அப்படிப்பட்ட சாக்ஷாத்காரத்திற்கு வேண்டிய சாதனத்தை இந்த மந்திரம் உபதேசிக்கிறது.

15.

శ్రు॥ హిరణ్మయేన పాత్రేణ సత్యస్యాపిహితం ముఖమ్।
తత్త్వంపూషన్నపావృణు సత్యధర్మాయ దృష్టయే॥

சுருதி ॥ ஹிரண்மயேந பாத்ரேண
ஸத்யஸ்யாபிஹிதம் முகம்।
தத்வம் பூஷந்நபாவ்ருணு
ஸத்யதர்ம்மாய த்ருஷ்டயே॥ கரு॥

| | |
|---|---|
| హిరణ్మయేన, పాత్రేన<br>ஹிரண்மயேந,பாத்ரேண | ஸ்வயஞ்சோதிஸ்வரூபமான பாத்திரத்தினுல் (பரிசுத்தமான அந்தக்கரணத்தினுல்) |
| సత్యస్య<br>சத்யஸ்ய | பிர்மஸ்வரூபத்தினுடைய (ஆத்மாவினுடைய ஸ்வஸ்வரூபத்தினுடைய) |
| ముఖమ్<br>முகம் | துவாரமானது (சாக்ஷாத்காரமானது) |
| అపిహితమ్<br>அபிஹிதம் | மூடப்பட்டது. என்ருல், శ్లో॥ అజ్ఞానకలుషంజీవంజ్ఞానాభ్యాసాద్వినిర్మలం। కృత్వాజ్ఞానంస్వయంనశ్యేత్ జలంకతకరేణువత్ ॥ నిషిధ్యనిఖిలోపాధీ న్నేతినేతీతివాక్యతః। విద్యాదైక్యంమహావాక్యైర్జీవాత్మపరమాత్మనోః॥ (ఆత్మబో॥ శ్లో. 5.29.) * சொல்லப்பட்டிருக்கிறபடி விருத்திஞான மிருக்கும் வரையில் ஸ்வாநுபவமாகிற சாக்ஷாத்காரம் உண்டாகாது. ஆகையால், சுத்தமாகியவிருத்தி ஞானத்தினுல் மூடப்பட்டது என்று சொல்லப்பட்டது |
| హేపూషన్ !<br>ஹேபூஷந் | சகலத்தையும் போஷிக்கிற ஓ பரமாத்மா ! |
| త్వమ్<br>த்வம் | நீ |

* ஆத்மபோத தத்துவார்த்த தீபிகையைப்பார்க்க.

తవ) (சத்திய ஞானாநந்த ஸ்வரூபியான உன்
வ னுடைய)

ృష్టయే சாக்ஷாத்காரத்திற்காக
ருஷ்டயே

త్యధర్మాయ, (சத்திய ஞானாநந்த ஸ்வரூபியான உன்
(మహ్యమ్) னையே எப்பொழுதும் ஹிருதயத்
த்யதர்மாய,(மஹ் தில் தியானித்துக் கொண்டிருக்கி
யம்) றவனை) சத்திய தர்மத்தையு
டைய (எனக்காக)

తీ அந்தத்துவாரத்தை (உன்னுடைய
த் சாக்ஷாத்காரமானஸ்வாநுபவத்தை)

పావృణు திறவும் (ஓ ஸ்வாமி) உண்டாக்கும் பர
பாவ்ருணு மாத்மாவே!என்றால்,అహం(அஹம்)
தியானம் செய்கிறேன், நான் என்
பது கூட நசித்தாலொழிய ஸ்வா
நுபவ முண்டாக மாட்டாதென்று
தெரிந்துக்கொள்ளவும்.)

தாத்பரியம்.

శ్లో॥ మనోహిద్వివిధంప్రోక్తం శుద్ధంచాఽశుద్ధమేవచ।
అశుద్ధంకామసంకల్పం శుద్ధంకామవివర్జితమ్।
మనఏవమనుష్యాణాం కారణంబన్ధమోక్షయోః।
బన్ధాయవిషయాసక్తం ముక్త్యైనిర్విషయంస్మృతమ్॥
(అమృతబిన్దూపనిషత్.)

(இ - ள்.) மனதானது சுத்தம் அசுத்தமென இருவகை
யாம். காமசங்கல்பத்துடன் கூடினது அசுத்தமனதென்றும்,

காமசங்கல்பமற்றது சுத்த மனதென்றுஞ் சொல்லப்படும்
அதனால், மனிதர்களுக்கு பந்த மோக்ஷத்திற்குக் காரண
மனதேயாம். விஷயாசக்தியுடன் சேர்ந்தது பந்த மனதென
வும், விஷயாசக்தியற்றது முத்திசாதனமான மனதெனவு
தெரிந்துக்கொள்ளவும்.

ஆகையால் விஷயாசக்தர்களாயும் காம்யகர்மாநுஷ்
டானத்தில் இச்சையுடையவர்ளுங்கூட ஈச்சுரார்ப
ணமாய் அந்தக் கர்மங்களைச்செய்யும் விஷயத்தில் ப
ம்பராக்கிரமமாய் மோக்ஷத்தை யடையலாமென்று
இதுவரையிலேயே சொல்லப்பட்டிருக்கிறது. அந்த
படி கர்மங்களைச்செய்து சித்த சுத்தியை யடைந்
பேர்கள் அநுஷ்டிக்கவேண்டிய சங்கதிகளை இந்த ம
திரம் உபதேசிக்கிறது. எங்ஙனமெனில்:—

சித்தசுத்தியை யடைந்தவர்கள் சித்த ஏகாக்ர
தை யடையும்பொருட்டு பிரயத்தனஞ் செய்யவேண
டியது அவசியமல்லவா? நான் தியானஞ் செய்கிறேன்
நிஷ்டையிலிருக்கிறேன் என்கிற நினைவு இருக்கும்
ரையில் ஏகாக்ரசித்த முண்டாகாது. ஆகையால்
சுத்தமான சித்தமென்ற பாத்திரத்தினால் (விருத்
ஞானத்தினால்) ஸ்வஸ்வரூபத்தினுடைய (ஆத்மா
னுடைய) சாக்ஷாத்காரமானது மறைக்கப்பட்டிருக்
றது. எனின், எப்பொழுது சுத்தமனதுங்கூட லய
தையடையுமோ அப்பொழுது தான் ஆத்மசாக்ஷா
காரம் உண்டாகுமென்று தெரிந்துகொள்ளவும். அ
பேர்ப்பட்ட லயத்தையடைவதற்காக பிரார்த்திக்கி
தாவது:—சகலத்திலும் அந்தரியாமியாயிருந்து போ
ஷிக்கிற, ஓ பரமாத்மாவே! உம்முடைய சாக்ஷா

காரத்தை எனக்கு உண்டாகச்செய்யும். எனில், சித்தசுத்தியென்ற உத்தமசகுணோபாஸனஸ்திதியை அடைந்திருக்கிற ஓ மனமே! நீ எதுவரைக்கும் ஆத்மாவினுடைய சர்வபரிபூர்ணதி குணங்களையாகிலும், அல்லது "ஸோஹம், ஸோஹம்," என்று நான் தியானத்திலிருக்கிறேனென்கிற "அஹம்" (நான்) என்னும் பேதபுத்தியுடன் கூடின சங்கல்பமிருக்கும்வரையில் ஐக்கியானந்தானுபவம் உண்டாகமாட்டாது. ஆகையால் அப்படிப்பட்ட பேதபுத்திக்குச்சாதனமான 'நான்" என்கிறதைக்கூட மறந்துவிடுமனதே, என்று ஆத்மாவை (தன்னுடைய சுத்தமனதை) தானே பிரார்த்திக்கிறனென்று தெரிந்துகொள்ளவும்.

கெட்ட சங்கற்பங்களெப்படி பந்தங்களுக்குக் காரணமோ அப்படி ஆரூடனுக்கு சத் சங்கல்பங்களும் மனோலயத்திற்குப் பந்தங்களென்பதில் பிரமாணம்.

శ్రు॥ అనాద్యవిద్యావాసనయా జాతోఽహమిత్యాదిసంకల్పో బన్ధః।
పితృ మాతృ సహోదర దారాఽపత్య గృహారామ క్షేత్రాది
మమతాసంసారావర్త సంకల్పో బన్ధః।
కర్తృత్వ భోక్తృత్వా ద్యహంకార సంకల్పోబన్ధః।
అణిమా ద్యష్టైశ్వర్యాశాసిద్ధి సంకల్పో బన్ధః।
యమా ద్యష్టాంగ యోగాభ్యాసాది సంకల్పోబన్ధః।
వర్ణా శ్రమధర్మ కర్మ సంకల్పో బన్ధః।
ఆజ్ఞా భయ సంశయాత్మ గుణ సంకల్పో బన్ధః।
యజ్ఞ వ్రత తపో దాన విధి విధాన జ్ఞాన సంకల్పో బన్ధః।

కేవల మోక్ష పేక్ష సంకల్పో బన్ధః।
సంకల్ప మాత్ర సంభవో బన్ధః॥ (నిరాలమ్బోపనిషత్.)

(இ-ள்.) ஞானமுண்டாகி சுவாநுபவம் உண்டாகிறவரை யில் பிரவாகரூப அனுதியாயிருக்கும் அவிவேகத்தினுல் தன்னுடைய நிஜஸ்வரூபத்தை மறந்து நான் பிறந்திருக்கிறேன் என்கிற அகங்காராதி சங்கல்பங்களும் பந்தமே. தாய், தந்தை, சகோதரன், மகன், சிநேகன், பெண்ஜாதி, தனம், தானியம் முதலானவை என்னுடையவைகள், என்கிற மமகார சங்கல்பங்களும் பந்தமே. நான் செய்கிறேன், நடக்கிறேன், அநுபவிக்கிறேனென்னுங் கர்த்திருத்துவாதிகளும் பந்தமே. அணிமாதி அஷ்டைசுவரியங்களும் உண்டாகவேணுமென்று எத்தனிக்குஞ் சங்கல்பங்களும் பந்தமே. ஹடயோகசாதனமான அஷ்டாங்க யோகங்களை அப்பியசிக்க பிரயத்தனிக்குஞ் சங்கல்பமும் பந்தமே. வர்ணுச்சிரம தர்மங்களையும் கர்மங்களையும் அநுஷ்டித்தால் சுவர்க்கத்தையடைந்து ஊர்வசி முதலான தேவதாஸ்திரீகளை அநுபவிக்கலாமென்ற சங்கல்பமும் பந்தமே. பிரபஞ்சசுகத்தை வேண்டி ஒருவனுக்கு அடங்கி, பயந்திருத்தலும், நல்விஷயத்தில் சித்திக்குமோ சித்திக்காதோ என்கிற சம்சய சங்கல்பங்களும் பந்தமே. யாகம் முதலான காம்யகர்ம சங்கல்பங்களும் பந்தமே. மோக்ஷாபேக்ஷ சங்கல்பமும் பந்தமே. கடைசியாய் எவ்வித சங்கல்பங்களும் பந்தமேயாம் என்று நிராலம்போபநிஷத் சொல்லுகிறது.

ஆகையால், சகல சங்கல்ப நாசனமே தியானம் நிஷ்டை சமாதி யென்கிற நாமங்களால் வழங்கப்படுகிறது. சகல சங்கல்பங்களும் பந்தமென்று சொல்லும் விஷயத்தில் நாம் செய்யக்கூடிய தொன்றுமில்லை, ஆகையால் நமக்கு வேதத்தினுலும் குருவினுலும் ஒரு பிரயோஜனமுமில்லை யென்று சொல்லக்கூடாது

ஏனெனில், பத்து படிக்கட்டுகளை யுடைய ஒருமேடையிலேற நினைக்கிறவன் முதற்படி யேறுகையில் தான்நிற்கும் பூமியை எப்படிவிடவேண்டியதோ, இரண்டாவது படி ஏறும்போது முதற்படியை எப்படிவிட வேண்டியதோ, மேற்படியில் ஏறும்போதெல்லாம் அதனதன் கீழ்ப்படிகளை எப்படி விட்டுவிடவேண்டியது அவசியமோ, அப்படி தன் புத்தியை அபிவிர்த்தி செய்யவேண்டுமென் றெண்ணுகிறவன் ஒன்றின் பின் ஒன்ருய் கர்மங்களைவிட்டு ஞானத்தை யடைந்து, அந்த ஞானத்தையுங்கூட இம்மந்திரத்தில் சொல்லப்பட்ட பிரகாரம் ஸ்வாநுபவமாகிய ஆத்மசாக்ஷாத்காரத்தின் பொருட்டு விடவேண்டியது. அபேதஸ்திதியை யடைந்தாலொழிய ஐக்கியத்தையடைய முடியாது. ஆகையால், ஸ்வாநுபவஸ்திதியிலிருக்கும் மனோலயமே பிர்ம்மசாக்ஷாத்காரத்திற்குச் சாதனமென்று இந்த மந்திரமுபதேசிக்கிறது.

"நான்"என்னும் நினைப்பிருக்கிறவரையில் ஸ்வாநுபவத்தை யடையமுடியாதென்பதற்குப் பிரமாணம்:—

శ్రు॥ నాహంమన్యే సువేదేతి నోనవేదేతి వేదచ।
యోనస్తద్వేద తద్వేద నోనవేదేతి వేదచ॥

(కేనోపనిషత్ II. 2.)

(இ - ள்.) நான்வேறு ஆத்மாவேறு என்று எண்ணுகிறவனும், நானே ஆத்மாவென்று எண்ணுகிறவனும், ஆத்மாவைத்தெரிந்தவனல்லன். "நான்" என்கிறஞானமிருக்கிறவரையில் ஆத்மசாக்ஷாத்கார முண்டாகமாட்டாதென்று தெரிந்துகொள்ளவேண்டியது.

சுத்த அசுத்த மனோநிக்கிரகமே ஆத்மசாக்ஷாத்கார த்திற்கு சாதனமென்பதற்கும், அப்படிப்பட்ட நிக்கிரகம் மனதினாலேயே உண்டாகவேணு மென்பதற்கும் பிரமாணம்:

శ్లో॥ ఉద్ధరేదాత్మనాత్మానం నాత్మానమవసాదయేత్।
ఆత్మైవహ్యాత్మనోబన్ధు రాత్మైవరిపురాత్మనః॥

భగవద్గీతా॥ VI. 5.

---

## பதினாறுவது மந்திரம்.

### அவதாரிகை.

மேற்சொன்ன மந்திரத்திற் சொன்னபடி ஏகாக்கிர சித்தத்தையடைவதற்கு ஆத்மாவை பிரார்த்தனைசெய்யப்படுகிறது, எப்படியெனில்:—

16

శ్రు॥ పూషన్నేకర్షే యమసూర్య
ప్రాజాపత్యవ్యూహరశ్మీన్సమూహ।
తేజోయత్తేరూపం కల్యాణతమం
తత్తేపశ్యామి యోఽసావసౌ పురుషస్సోహమస్మి॥

சுருதி ॥ பூஷந்நேகர்ஷேயமஸூர்ய
ப்ராஜாபத்ய வ்யூஹரச்மீன் ஸமூஹ!
தேஜோயத்தேருபம் கல்யாணதமம்தத்தே
பச்யாமியோ அஸாவஸௌபுருஷஸ்ஸோஹமஸ்மி॥ கசு॥

...ాపూషన్ ! ...ஹபூஷந் ! — காணப்படுகிறவும் காணப்படாதவுமான சகலத்தையும் போஷிக்கும் ஓ பரமாத்மா !

...ాఏకర్షే ...ஹ ஏகர்ஷே ! — (சகலத்தையும்போஷிக்கிறவனுகையால்) இரண்டற்ற ஓ பரமாத்மா !

...ాయమ ! ...ஹ யம ! — (இரண்டற்றவனுகையால்) எல்லாவற்றிற்கும் சிக்ஷகனுன ஓபரமாத்மா

...ాసూర్య ! ...ஹஸூர்ய ! — (எல்லாவற்றிற்கும் சிக்ஷகனுகையால்) சூரியன் எப்படி தன்னுடைய கிரணங்களினுல் சகலத்திலு மிருக்கிற ஈரத்தைப் போக்கடிக்கிருனே, அப்படி தன்னேஸ்மரிக்கிறவர்களுடைய அவிவேகத்தைப் போக்கடிக்கும் ஓபரமாத்மா !

...ాప్రాజాపత్య ! ...ஹ ப்ராஜாபத்ய ! — (பிராணிகளினுடைய அவிவேகத்தைப்போக்கடிக்கிறவ னுகையால் சம்சாரத்தினுடைய அபிவிர்த்தியில் வைராக்கியத்தை யுண்டுபண்ணும் ஓபரமாத்மா!

...శ్మీన్ ...ச்மீந் — கிரணங்களே (அநேகத்துவத்தை, பேதபுத்தியை)

...్యూహ ...யூஹ — போக்கடிக்கும், விலக்கும்

| | |
|---|---|
| తేజః<br>தேஜஃ | பிரகாசத்தை (சுத்தமனதையுங்கூட |
| సమూహ<br>ஸமூஹ | இந்திரியக் கூட்டங்களுடன் சேர்த<br>துவிடும். தியானத்தில் எப்படி இ<br>திரிய நிக்கிரகமாகிறதோ அப்படி<br>நிஷ்டையில் சுத்தமனதையுங்கூட<br>லயிக்கச்செய்யும்.) |
| తే<br>தே | உன்னுடைய |
| యత్<br>யத் | எந்த |
| రూపమ్<br>ரூபம் | ரூபமானது |
| కల్యాణతమమ్<br>கல்யாணதமம் | மிகவும் மங்களகரமானதோ, (மிகவ<br>சுத்தமானதோ) |
| తత్<br>தத் | அந்தரூபத்தை |
| తే<br>தே | உன்னுடைய |
| (ప్రసాదాత్)<br>ப்ரஸாதாத் | (அநுக்கிரகத்தினுல்) |
| పశ్యామి<br>பச்யாமி | பார்க்கிறேன் (சாக்ஷாத்காரமான<br>வாநுபவமுண்டாகும்) |
| అసౌ<br>அஸௌ | இந்த சகலரூபங்களாயு மிருக்கிறவ |

యః
யஃ — எவனே

సః, అసౌ, పురుషః
ஸஃ அஸௌ, புருஷஃ — அந்த இந்த புருஷன்

అహమ్
அஹம் — நாஞக

అస్మి
அஸ்மி — இருக்கிறேன்.

### தாத்பரியம்.

பகவான் (ஆத்மா) சகலத்தையும் போஷிக்கிறதாகையால் ஓரேவஸ்துவாயும், ஓரேவஸ்துவாகையால் சகலத்தையும் சிக்ஷிக்கிறதாயும், சிக்ஷிக்கிற தாகையால் சூரியன் எப்படி தன்னுடைய கிரணங்களால் பதார்த்தங்களின் ஈரத்தைப் போக்கடிக்கிருனே, அப்படி தன்னை ஸ்மரிக்கிறவர்களுடைய அவிவேகத்தைப் போக்கடிக்கிறதாயும், ஆகையினுலேயே சம்சார அபிவிர்த்தியில் வைராக்கியத்தை யுண்டுபண்ணுகிறதாயு மிருக்கிற ஓ பரமாத்மா! (ஓ சுத்தமனதே!) அநேகத்வமான பேதபுத்தியை என்னிடத்திலிருந்து நீங்கச்செய்யும், (விட்டுவிடு,) பிற்பாடு சுத்தமனதான நீயும் இந்திரியங்களுடன் லயத்தை யடைவாயாக. அப்படியானுல் உன்னுடைய எந்த ஸ்வரூபமானது மிகவும் சுத்தமானதோ, அந்த ரூபத்தை (ஸ்திதியை) உன்னுடைய அநுக்கிரகத்தால் (சுத்தமனதுங்கூட லயிக்கிறதினுல்) சாக்ஷாத் காரமான

ஸ்வாநுபவ ஸ்திதி உண்டாகும். அதுவே சகல ஸ்வரூபமாயிருக்கிற ஸ்திதி என்றும், முக்தியென்றும் சாஸ்திரங்களினாலும் பேரியோர்களாலுஞ் சொல்லப்படுகிறது. அதனால் அப்படிப்பட்ட அபேத ஸ்திதியாகிற ஸ்வாநுபவத்தை யடைவதற்காக ஆத்மாவை (சுத்தமனதைப்) பிரார்த்திக்கும்விதத்தை இந்த மந்திரம் உபதேசிக்கிறது.

---

## பதினேழாவது மந்திரம்.

### அவதாரிகை.

இதுவரைக்குஞ் சொல்லப்பட்ட மந்திரங்களின் பிரகாரம் உத்தம சகுணோபாஸனையென்கிற காமக்குரோதாதிகளற்றிருக்கக்கூடிய சித்தசுத்தியை யடைந்து நிர்க்குண ஸ்திதியென்ற தியானம், நிஷ்டை, சமாதி, சாக்ஷாத்காரம், ஸ்வாநுபவம் முதலிய இப்பெயர்களால் வழங்கப்படும் ஸ்திதியை அடைந்தவனுடைய மரணத்திற்குப் பிற்பாடு சரீரம் என்ன ஆகிறது என்கிற அம்சங்களைத் தெரிவிக்கும்பொருட்டு இந்த மந்திரம் ஆரம்பிக்கப்படுகிறது.

17.

శ్లో॥ వాయురనిలమమృతమథేదం
భస్మాన్తగ్ం శరీరమ్।
ఓమ్, క్రతో స్మర కృతగ్ం స్మర
క్రతో స్మర కృతగ్ం స్మర॥ ౧౭॥

சுருதி || வாயுரநிலயமமிருதமதேதம்
பஸ்மாந்தகும்சரீரம்।
ஓம், க்ரதோஸ்மர க்ருதகும்ஸ்மர
க்ரதோஸ்மர க்ருதகும்ஸ்மர || கஎ ||

అథ
அத — இறந்தபிறகு

ఇదం, శరీరమ్
இதம், சரீரம் — இச்சரீரமானது

భస్మాన్తమ్, (భూయాత్)
பஸ்மாந்தம், (பூயாத்) — அணுக்களேயே முடிவாகவுடையதாகக்கடவது. மண் மண்ணுடன்சேருகிறதுபோல, பிருதிவி அம்சமான சரீரம் பிருதிவியில் கலந்துபோகும்.)

వాయుః
வாயுஃ — (துவக், சக்ஷுஸ், சுரோத்திரம், ஜிஹ்வை, ஆக்கிராணம் என்கிற ஞானேந்திரியங்களைந்தும், வாக்கு, பாணி, பாதம், பாயு, உபஸ்தம் என்கிற கர்மேந்திரயங்களைந்தும், அந்தக்கரணம் ஒன்றும், இவைகளுக்காதாரமான பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என்கிற பூதங்கள் ஐந்தும், இவைகளெல்லாவற்றையுஞ் சேர்த்து "நான்", "எனது" என்று விவகரிக்கும் ஜீவப்பிராந்தி ஒன்றும் ஆக இப்பதினேழு தத்துவங்களேயுமுடைய லிங்க (சூக்ஷ்ம) சரீரத்

திற்கு உபலக்ஷணார்த்தமாகச் சொல்லப்படும்) பிராணனது

ఽనిలమ్, (సమ్పద్యతే)
அநிலயம், (ஸம்தப்யதே)

சூக்ஷ்மபிராணனை சூத்திராத்மாவையடையும். (எனில், மேற்சொல்லப்பட்ட ஞான கர்மேந்திரியங்களும், பஞ்சபூதங்களும், அந்தக்கரணமும், ஜீவப்பிராந்தியும் இவைகளுக்காதாரமான ஸ்வகீயமாயுள்ள மூலப்பிரகிருதியில் லயத்தையடையும்.)

అమృతమ్, (ప్రతిపద్యతామ్)
அம்ருதம், (ப்ரதிபத்யதாம்)

நாசமற்ற (அழிவில்லாத) ஸ்திதியாகிற மோக்ஷத்தையடையும். (எனில், பேதபுத்தியோடு கூடியிருக்கிற ஜீவப்பிராந்திக்காதாரமான மூலப்பிரகிருதி, பிர்மத்தில் (ஆத்மாவில் லயத்தையடையும். அதுதான் சாசுவதமானதும், நாசரகிதமானதுமான சர்வோத்தமஸ்திதியென்றும் முக்தியென்றும் தெரிந்துகொள்ளவும்.)

హే క్రతో!
ஹேக்ரதோ!

சங்கல்பாத்மகமான ஓ ஜீவா!

ఓమ్,
ஓம்

ஓம் என்று (அகார, உகார, மகார, ஸ்வரூபத்தை, விசுவ, தைஜஸ, பிராஞஸ்வரூபமான முக்குணங்களேயும் தாண்டினதெதுவோ, அதுவே

"ஓம்" என்பதின் லக்ஷியார்த்தமெ ன்றறியவும்.)

స్మర
ஸ்மர

ஸ்மரணேசெய் (தியானம்பண்ணு)

ృతమ్, స్మర
ருதம்,ஸ்மர

பிர்மசர்ய, கிரஹஸ்த, வானப்பிரஸ்த மாகிய இம்மூன்றுஆச்சிரமங்களில் காயத்ரீஸ்வரூபமாயும், சந்நியாச ஆச்சிரமத்தின் முதலில் சித்தசுத் தியை யடைவதற்காகப்பிர்ணவஸ் வரூபமாயும் சித்தசுத்தியை யடை ந்தபிற்பாடு ஐக்கியமாகிய ஏகாக்கி ரசித்தத்தை யடைவதற்காக, "அ ஹம்பிர்ம்மாஸ்மி" என்கிற அபேத ஸ்திதியையடையும் பொருட்டு எ ல்லோராலும்) அநுஷ்டிக்கப்படுகி றவிதமாக ஸ்மரிப்பாயாக

హేక్రతో !
ஹேக்ரதோ !

ஓ ஜீவா !

స్మర
ஸ்மர

மேற்சொன்னவிதமாய்ஸ்மரிப்பாயாக

ృతమ్, స్మర
ருதம், ஸ்மர

இதுவரைக்கும் அநிஷ்டித்துக்கொண் டுவந்த மாதிரியாய் ஸ்மரிப்பாயாக, (முதலிலிருந்தே சத்சங்கத்துடன் சேர்ந்துசத்குருவையடைந்து அநு ஷ்டானஞ் செய்தவனுக்கு மரண

காலத்தில் நிஷ்டையிலேயே (ப
வானிடத்திலேயே, ஆத்மைக்கிய
திலேயே, பிர்மானந்தத்திலேயே
மனதுலயித்துபஞ்ச பூதங்கள் மு
லியவைகள் தன் தன்னிடத்தை
சேர்ந்து மறுபடியும் ஜென்மத்தி
கிடமில்லாமல் போய்விடுமென்
தாம்.)

தாத்பரியம்.

ஞாநநிஷ்டையையுடைய ஜீவன்முக்தன் மரணத்தை
யடைந்தபோது, அவனுடைய ஸ்தூல சரீரமானது
சாம்பலாகி (மண்ணாகி) மண்ணோடுமண்ணாய்க் கலந்து
போம். இந்த சித்தாந்தமானது விவேகிக்கும் அவி
வேகிக்கும் ஒன்றேயாம். ஜீவன்முக்தனுடைய சூக்ஷ
மசரீரமான, துவக், சக்ஷு, ஜிஹ்வை, ஆக்கிராணங்
ளென்கிற ஞானேந்திரியங்களைந்தும், வாக், பாணி
பாதம், பாயு, உபஸ்தங்களென்கிற கர்மேந்திரியங்கள்
ஐந்தும், பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசங்களெ
னப்படும் பூதங்களைந்தும், அந்தக்கரணம் ஒன்றும்
ஜீவப்பிராந்தியொன்றும், ஆக இப்பதினேழும், இவை
களுண்டாவதற்குக் காரணமான மூலப்பிர கிருதி
யை யடையும். எப்பொழுது சூக்ஷமசரீரத்திற்கு
நாசமுண்டாகுமோ (அவையவைகளின் ஸ்தானத்தை
யடையுமோ) அப்பொழுதே அந்தச் சூக்ஷமசரீரத்
திற் காதாரமான காரணசரீரமென்கிற அவித்தை நசிக்
கும். (தன்னுடைய ஸ்திதியை அடையும்) அதினாலே
யே பிராந்தி நிவர்த்தகமான ஜீவன் தன்னுடைய ஸ்வ

ஸ்தானத்தை (ஆத்மத்துவத்தை) அடைந்ததுபோலி ருப்பான். இந்த அர்த்தத்தையே ஆத்மபோத தத்துவார்த்த தீபிகையின் 44-வது சுலோகம் விவரிக்கிறது. எப்படியெனில்,

శ్లో॥ ఆత్మాతుసతతంప్రాప్తోఽ ప్యప్రాప్తవదవిద్యయా।
తన్నాశేప్రాప్తవద్భాతి స్వకంఠాభరణంయథా॥

(ఆత్మబోధ శ్లో॥ 44)

இப்படியடைந்ததாயுள்ளதே முக்தியென்றும் துக்கநிவர்த்தியென்றும், நிரங்குசத்திருப்தி யென்றும், பிர்ம்மஸாக்ஷாத்காரமென்றும், ஸ்வாநுபவமென்றும், மோக்ஷமென்றும் சாஸ்திரங்களினால் சொல்லப்படுகிறதென்று தெரிந்துகொள்ளவும்.

இப்படிப்பட்ட ஜீவன்முக்தன் தன்னுடைய சரீர பதனகாலத்தில்,

శ్లో॥ ఓఙ్కారస్సర్వవేదానాం సారస్తత్త్వప్రకాశకః।
తేనచిత్తసమాధానం ముముక్షూణాంప్రకాశ్యతే॥

(இ-ள்.) "ஓம்," என்கிறது சகல வேதங்களினுடைய சாராம்சமாயிருக்கிறது. இது சித்தசமாதானத்தை (சித்தவிச்சிராந்தியை) யடைந்த ஞானிகளிடத்திலேயே பிரகாசிக்கும்.

"ஓம்" என்கிற பிரணவஸ்வரூபமான "அஹம்பிர்ம்மாஸ்மி" என்கிற அபேதஸ்திதியை யடைந்து ஜநந மரணமற்ற ஸாயுஜ்யத்தைப் பெறுவானென்று இம்மந்திரம் உபதேசிக்கிறது.

"அஹம்பிர்ம்மாஸ்மி" என்கிற நிஷ்டையானது அபேத ஸ்திதியையுண்டுபண்ணு மென்பதற்குச் சுருதிப்பிரமாணம்:—

శ్రు॥ య ఏవం వేదాహం బ్రహ్మాస్మీతి స ఇదం సర్వం భవతి॥

(இ-ள்.) எவன் "நான் பிர்ம்மனுனேன்" என்று ஸ்வாநுபவத்தால் தெரிந்துகொள்ளுகிருனே அவன் இந்தக்காணப்படுகிறதும் காணப்படாததுமான சகலமும் தானுகவே இருப்பான்.

மனிதன் இறக்கும்போது எவ்வித எண்ணத்துடன் இருப்பானே, அந்தஸ்திதியையே அடைவான், என்பதற்குப் பிரமாணம்:

శ్లో॥ యంయంవాపిస్మరన్భావం త్యజత్యన్తే కళేబరమ్।
తంతమేవైతికౌన్తేయ! సదాతద్భావభావితః॥

భగవద్గీతా. VIII. 6.

பிர்ம்மத்தை "ஓம்" என்கிற சப்தத்தினுல் ஸ்மரிக்கப்படுமென்பதற்குப் பிரமானம்:

శ్లో॥ ఓమ్ తత్ సత్ ఇతినిర్దేశో బ్రహ్మణస్త్రివిధస్స్మృతః॥

భగవద్గీతా. XVII. 23.

---

## பதினெட்டாவது மந்திரம்.

### அவதாரிகை.

அநேகவிதங்களினால் சொல்லியும் புத்தியை ஞானமார்க்கத்தில் பிரவேசிக்க விடாமல் கர்மங்களை மிகவும் ஆசையுடன் அநுஷ்டித்து சுவர்க்காதி லோகங்களையடைந்து ஶ்லோ॥ "క్షీణే పుణ్యే మర్త్యలోకం విశన్తి" என்கிற சுருதிப்பிரகாரம் தான்செய்த புண்ணியகர்மத்தினளவாய் சுவர்க்காதிபோகங்களை அநுபவித்த பிற்பாடுமெறுபடியும் இப்புவியில் ஜந்மித்து காம்யகர்மத்தையே அநுஷ்டிக்கிறவர்கள் தம்முடைய மரணகாலத்தில், தாங்களிதுவரையில் ஆராதித்துவந்த அக்கினியைபிரார்த்திக்கிற விதத்தை இம்மந்திரம் கூறுகிறது.

18.

శ్రు॥ అగ్నే నయ సుపథా రాయే
అస్మాన్విశ్వాని దేవ వయునాని విద్వాన్।
యుయోధ్యస్మజ్జుహురాణమేనో
భూయిష్ఠాం తే నమ ఉక్తిం విధేమ॥

சுருதி ॥ அக்நேநயஸுபதாராயே
அஸ்மாந்விசுவாநிதேவ வயுநாநிவித்வாந்।
யுயோத்யஸ்மஜ்ஜுஹுராணமேநோ
பூயிஷ்டாந்தே நமஉக்திம் விதேம॥ ௰அ॥

హే అగ్నే! ஹே அக்நே (என்னால் அநேகவிதங்களாய் உபாஸிக்கப்பட்ட); ஓ அக்கினிதேவனே!

| | |
|---|---|
| అస్మాన్<br>அஸ்மாந் | எங்களை |
| సుపథా<br>ஸுபதா | நல்லவழியாக (அர்சராதிமார்க்கமாக) |
| రాయే<br>ருயே | தனத்திற்கு (சுவர்க்காதி புண்ணிய லோகத்திற்கு) |
| నయ<br>நய | கூட்டிக்கொண்டுபோம் (வழிநடத்தும்) |
| హే దేవ!<br>ஹேதேவ | பிரகாசஸ்வரூபனுன ஓ தேவனே! |
| విశ్వాని<br>விசுவாநி | (எங்களால் செய்யப்பட்ட) சகலமான |
| వయునాని<br>வயுநாநி | (அக்கிநிஹோத்திர, யக்ஞ, யாகாதி) கர்மங்களை |
| విద్వాన్<br>வித்வாந் | தெரிந்துகொண்டவனுய் |
| అస్మత్<br>அஸ்மத் | எங்களால் |
| జుహురాణమ్<br>ஜுஹுராணம் | வஞ்சனையாய்ச் செய்த (பலன்களைக் கோரிச்செய்த) |
| ఏనః<br>நஃ | பாபத்தை |

యుయోధి
யுயோதி — நசிக்கச்செய்யும்.

తే
தே — உன்பொருட்டு

భూయిష్ఠామ్
பூயிஷ்டாம் — அநேகமான

నమః, ఉక్తిమ్
நமஃ, உக்திம் — நமஸ்காரவாக்கியத்தை

విధేమ
விதேம — நமஸ்காரக்கிரியையால் செய்கிறேன். (எனில், நீ இப்படிப்பட்ட பாபத்தைப் போக்கடிக்கிறதற்கு, எங்களால் செய்யக்கூடிய பிரதிப்பிரயோசனம் என்ன இருக்கிறது? அதற்காகவே அநேக நமஸ்காரங்களைச் சமர்ப்பிக்கிறோம். க்ஷமித்துக் கொள்ளும்)

### தாத்பரியம்.

ஓ அக்கினி தேவனே! அநேக காலமாய் (ஜன்மங்களாய்) உம்மையே ஆராதிக்கிறோமாகையால் எங்களை கஷ்டமானதக்ஷிணாயண மார்க்கத்தைவிட்டு உத்தராயணமார்க்கமாக நடத்தும். ஓ சுவாமி! எங்களால் செய்யப்பட்ட சகலமான அக்கினிஹோத்திராதி கர்மங்களைத் தெரிந்துகொண்டவராய், பலன்களை கோரி அநுஷ்டித்த வஞ்சனை மனதையுடைய எங்

ளுடைய பாபங்களை நசிக்கச்செய்யும். எங்களுடைய பிரார்த்தனைகளை அங்கீகரித்து எங்களை மன்னித்த உமக்கு, நாங்களென்ன பிரதிப் பிரயோஜனஞ் செய்யப்போகிறோம். எங்கள் கையாலானது சாஷ்டாங்க நமஸ்காரமே. ஆகையால் அனந்தகோடி நமஸ்காரம், என்ற காம்யகர்மாநுஷ்டானஞ் செய்பவர்களின் பிரார்த்தனையை இந்த மந்திரம் உபதேசிக்கிறது.

ఓమ్ పూర్ణమదః * * * * * అవశిష్యతే॥

ఓమ్ శాన్తిః శాన్తిః శాన్తిః.

இப்படி

ஸ்ரீமத் பரமஹம்ஸ

பாலசுப்பிரமணிய பிர்ம்மசுவாமிகளால்

டீகாசகிதமாய் ரசியிக்கப்பட்ட

இந்த ஈசாவாஸ்யோபநிஷத்

முற்றிற்று.

---

ఓమ్, తత్, సత్॥

బ్రహ్మార్పణమస్తు.

సద్గురోః కృపయా సమాప్తిమగమత్.

---